# வைதிக தர்ம வர்த்தனீ



மலர் 13 | சார்வரி௵
இதழ் 7 | சித்திரைமீ

ஆசிரியர் :
ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

## சார்வரிஞூ சித்திரைமீ வஸந்தருது. உத்தராயணம்.

| தேதி | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ப்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | புத. | த்வி. | 37-08 | சுவா. | 18-55 | சி. | — |
| 2 | 14 | வியா. | த்ரி. | 30-02 | விசா. | 13-50 | சி. | — |
| 3 | 15 | வெ. | சது. | 22-50 | அனு. | 8-35 | சி.ம. | ச.ப. |
| 4 | 16 | சனி | பஞ். | 15-52 | கேட். | 3-28 | | |
| | | | | | மூல. | 58-43 | சி. | ஷஷ் |
| 5 | 17 | ஞா. | ஷஷ். | 9-25 | பூரா. | 54-47 | சி.அ. | சப். |
| 6 | 18 | திங். | ஸப். | 3-40 | உத்தி. | 51-40 | ம அ. | |
| | ஏப்ரல்மீ | | அஷ். | 58-48 | | | | அஷ் |
| 7 | 19 | செவ். | நவ. | 54-57 | சிர. | 49-32 | சி. | நவ. |
| 8 | 20 | புதன் | தச. | 52-05 | அவி. | 48-23 | சி. | தச. |
| 9 | 21 | வியா. | ஏகா. | 50-17 | சத. | 48-17 | ம. சி. | ஏகா. |
| 10 | 22 | வெள் | த்வா. | 49-32 | பூரட். | 49-12 | சி. | த்வா. |
| 11 | 23 | சனி | த்ர. | 49-45 | உத்ர. | 51-05 | சி. | த்ர. |
| 12 | 24 | ஞா. | சசி. | 51-02 | ரேவ. | 54-00 | அ.சி. | சசி. |
| 13 | 25 | திங் ● | அமா. | 53-15 | அசு. | 57-50 | சி. | அமா |
| 14 | 26 | செவ். | ப்ர. | 56-32 | பர. | 60-00 | சி. | ப்ர. |
| 15 | 1960ஞ் 27 | புதன் | த்வி. | 60-00 | ,, | 2-40 | ம. | த்வி |
| 16 | 28 | வியா. | ,, | 0-47 | க்ருத். | 8-27 | சி.அ. | த்ரி. |
| 17 | 29 | வெள். | த்ரி. | 5-50 | ரோ. | 15-00 | ம. சி. | சது. |
| 18 | 30 | சனி | சது. | 11-37 | மிருக. | 22-15 | சி. | பஞ். |
| 19 | 1 | ஞா. | பஞ். | 17-45 | திரு. | 29-42 | சி. | ஷஷ் |
| 20 | 2 | திங். | ஷஷ். | 23-48 | புன. | 37-00 | அ.சி. | — |
| 21 | 3 | செவ். | ஸப். | 29-15 | பூச. | 43-40 | சி. | சப். |
| 22 | 4 | புதன் | அஷ் | 33-35 | ஆயி. | 49-10 | சி. | அஷ் |
| 23 | மேமீ 5 | வியா. | நவ. | 36-22 | மகம் | 53-02 | அ.சி. | நவ. |
| 24 | 6 | வெள். | தசமி | 37-15 | பூரம் | 55-00 | சி. | தச. |
| 25 | 7 | சனி | ஏகா. | 36-03 | உத். | 54-58 | ம. | ஏகா. |
| 26 | 8 | ஞா. | த்வா. | 32-52 | ஹஸ். | 53-00 | அ.சி. | த்வா |
| 27 | 9 | திங். | த்ர | 27-50 | சித். | 49-15 | அ. | த்ர. |
| 28 | 10 | செவ் ○ | சசி. | 21-13 | சுவா. | 44-05 | சி. ம. | ச பூ. |
| 29 | 11 | புதன் | பௌ. | 13-27 | விசா. | 37-57 | சி. | ப்ர. |
| 30 | 12 | வியா. | ப்ர. | 4-55 | அனு. | 31-12 | சி. | த்வி. |
| | | | த்வி. | 56-03 | | | | |
| 31 | 13 | வெள். | த்ரி. | 47-18 | கேட். | 24-25 | ம.அ. | த்ரி. |

1உ வருஷப் பிறப்பு, 9, 25உ ஏகாதசி, 11, 26உ ப்ரதோஷம், 13உ அமாவாஸை, 15உ க்ருத்திகை, 19உ ஸ்ரீசங்கர ஜயந்தி.

**ஆசார்யாள் அரிய உபதேசத்தை மறவாதீர்கள்.**

यतो धर्मः ततः कृष्णः

यतः कृष्णः ततो जयः

# வைதிக தர்ம வர்த்தனீ



धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | சார்வரிஹு சித்திரைமீ | இதழ் 7



## பொருள் அடக்கம்.



வருஷ சந்தா ரூ. 5.
தனிப்ரதி 44 ந. பை.

காரியாலயம்:
வைதிக தர்ம வர்த்தனீ,
கடவாசல்,
வடகால் போஸ்ட்,
சீர்காழி வழி,
(தஞ்சை ஜில்லா.)

# நிக்ரஹ: கிங்கரிஷ்யதி?

ஸர்வ வல்லமை யுள்ள தாங்கள் துஷ்டர்களை அடக்கி யுத்தம் நடக்காதபடி செய்யலாகாதா? என்று பகவானை வினவினுன் பார்த்தன். அதற்கு பகவான் அளித்த விடையே தலைப்பிலுள்ளது. யுத்தம் செய்யமாட்டேன் என்கின்ற நீயே பிரக்ருதியால் தூண்டப் பட்டு நிச்சயமாக யுத்தம் செய்யப்போகிருய் என்ருர் பகவான்.

ஸர்வக்ஞர்! தபஸ்வி! ஆசாரசீலர்! வாக்மி! அநுஷ்டாதா! தயாளு! மேதாவி! பொருமைசாலி! தீரர்! ஜிதேந்த்ரியர்! கருணை மூர்த்தி! வள்ளல்! பேசும் தெய்வம்! சுறுங்கக் கூறின் ஸகல நற் குணங்களும் ஒன்ருகச் சேர்ந்து வந்த மூர்த்தி! அதே ஆதிசங்கரரின் அவதாரமூர்த்தி! ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தலைவர் எனும் குருமூர்த்தி.

தர்மமிகு சென்னையில் முன்னோர் செய்த புண்யத்தால் மூன்று ஆண்டுகள் தங்கி விஜயம் செய்தார். கண்ணைக் கவரும் கடவுள் ஆராதனம்! அமிருதத்தினு மினிய அழகிய சொற்கள்! புன்னகை பூர்த்த முகம்! கருணை ததும்பும் கடாக்ஷம்! க்ஷேமமாயிரு என அபய ஹஸ்தம்! எத்தனைமுறை பன்னிப்பன்னி குடும்பவிஷயம் கேட்டாலும் வெறுப்பின்றி பதில்! ஆஹா! என்னே பொருமை! என்னே அருமை! என்னே தேஜஸ்!

ஒரு முறை பார்த்தோம், போதும்! கேட்டோம், போதும்! என்ற எண்ணம் உண்டாவதில்லை! ஒரே கூட்டம்! எப்போதும் கூட்டம்! எங்கு சென்ருலும் கூட்டம்! குறைகூறிக் கொள்ளவரும் கூட்டம்! பவானி பட கூட்டம்! பொன்காசு, வெள்ளிக்காசு கூட்டம்! அபிஷேக தீர்த்தக் கூட்டம்! பிரஸாதக் கூட்டம்! பில்வ மாலை, துளஸிமாலைக் கூட்டம்! இவை? அளவு கடந்த ஆஸ்திகப் பெருக்கின் அறிகுறி எனலாமா?

இக் கூட்டம் எல்லாமே உண்மை பக்தக் கூட்டம் எனக் கூற முடியுமா? ஆனுல் ஸினிமா வாசலில் கூட்டம் குறைந்திருக்க வேண் டுமே! பட்டுப்புடவை! நாகரிக அலங்காரம் குறையவேண்டுமே! உரியவர் உரியபடி ஆடை அணியவேண்டுமே! வேதங்கற்க வேண் டுமே! காலத்தில் பூணல் போடவேண்டுமே! எளியவர் விவாஹத் திற்கு உதவவேண்டுமே? நக்ஷத்ர உண்டி வேண்டுமே! உண்டா??

ஆயிரத்தில் ஒருவர் உண்மை பக்தர் உண்டா? லக்ஷத்தில்? கோடியில்? நூறுகோடியில் ஒருவர் உண்டு எனலாம்! தனது ஸ்வ பாவத்தை ஜயித்து, பரம குருவின் சொற்படி நடப்பவர் தெய்வப் பிறவியே யாவர்! ஸ்வல்ப தியாகம் கூட செய்யாதவர் ஸன்னிதியில் மாத்ரம் மிக ஒழுங்காய் நடப்பதாக நடிப்பவர் தன் பிருகிருதிக்கு வசமானவர் அல்லவா?

கௌரவ பாண்டவர்களை பகவான் அடக்க முடியவில்லை. பக வத் பாதாள் சிலரை ஆட்கொண்டதுதான் விந்தை. ஜம்புகேசம் சென்ற ஸ்ரீ புண்ய மூர்த்தியின் தர்சநம் எப்போ? எப்போ? என ஏங்குவர் பக்தர்!

---

*ஸம்ப்ரதாயப்படி திருநீர், திருமண் இடுங்கள்.*

## புத்தக அறிமுகம்.

**யதிதர்ம ப்ரதீபிகா:** முற்றிலும் ஸம்ஸ்கிருதம். ஸ்ரீ பரமஹம்ஸ பரிவ்ராஜக கர்கர்களுக்குத் துறவு முதல் ஸித்திவரை ஸகல விஷயங்களுமுளது. சைவ ஸம்ப்ரதாயத்தைத் தழுவியது. விலை 3 ரூ. ஸ்ரீ ரங்கஸ்வாமி தீக்ஷிதர், 36, வெங்டாசல செட்டி தெரு, திருவல்லிக்கேணியிலும்; ஸ்ரீ சங்கராலயம், மைலாப்பூரிலும் கிடைக்கும்.

**கந்தன் கழல்:** ஸ்ரீ V. S சுப்ரமண்யன் எழுதியது. முற்றிலும் தமிழ். 60 பக்கம். விலை தபால் செலவுடன் 50 ந. பைசா. 54, ஈச்வரதாஸ் லாலா தெரு, சென்னை-5. ஸ்கந்தனைப் பற்றி பல பிரிவாக வகுக்கப்பட்டது. சில பாடல்களு முள.

**ஸ்ரீமத் ராமாயண ஸாரம்:** தமிழ் 8 பக்கம். விலை 12 ந. காசு, "புத்தி மதாம் வரிஷ்ட" என்பதை விளக்குவது. 7, ஸ்டேஷன் ரோடு, மேல மாம்பலம், சென்னை 17.

**யஜுர்வேத ஸந்த்யா வந்தனம்:** ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ ஸோம தேவ சர்மா. விலை ரூ. 1-50 ந. பை. V. P. 2–25 ஷை புத்தகமே இல்லாதபோது முதல் பதிப்பு வந்தது. பலர் பலவகையாக இதை இப்போது வெளியிட்டாலும் சென்ற ஓராண்டாக இந்த வெளியீட்டையே பலர் கேட்பதிலிருந்து நமது பிரயாஸத்தை ஆஸ்திக உலகம் சிறிது உணர்ந்திருப்பதாகத் தெரிகிறது. பத்ரிகையில் கண்டவுடனேயே டில்லி ஸ்ரீ V. P. அய்யர் 25 காபிகளுக்கு முன்பண மனுப்பி விட்டார். குருகுலம், 2, ஸ்டேஷன் ரோட், மேல மாம்பலம், சென்னை 17ல் கிடைக்கும்.

**ரிக்வேத, ஸாமவேத ஸந்த்யை:** பலர் பல நாட்களாக கோரியபடி இவ்விரண்டு வேதங்களுக்கும் ஸந்த்யா வந்தனம், ஸமிதாதானம், ஔபாஸனம், பிரும்ம யக்ஞத்துடனும், அர்த்தத்துடனும், ஸாம ஸந்த்யா வந்தனமும், ஆச்வலாயன ஸந்த்யை எனும் ரிக்வேத ஸந்த்யா வந்தனமும், நாகரத்திலும் தமிழ் எழுத்திலும், காயத்ரீ படத்துடன் வெளியிட்டிருக்கிறோம் இரண்டும் சேர்ந்து விலை 75 ந. பை. V. P. யில் 1–40 ஆகும். குருகுலம், 2, ஸ்டேஷன் ரோட், W. மாம்பலம், சென்னை-17ல் கிடைக்கும்.

**ஸ்ரீ சங்கர சரிதம்:** 6 அணு. தமிழில் ஆசார்ய பூஜையுடன் மாம்பலம் குருகுலத்தில் 45 ந. காசு அனுப்பிப்பெறலாம்.

18 புராணம் 2ஆம் பாகம், தேவீ பாகவதம், இந்த்ராக்ஷி சிவ கவசம், புவனேச்வரீ, த்ரிசதி, ஸௌபாக்ய அஷ்டோத்தர சதநாம, வேதமும் வேதாங்கமும் இப்புஸ்தகங்கள் ஒரு காபி கூட இல்லை. வியாபாரிகள் தவிர மற்றவர் அச்சிட விரும்பினால் எழுதவும்.

N. B.–விலாஸத்தை விளக்கமாக தமிழில் எழுதுக. **நமது பிரசுரமாத்ரமே கிடைக்கும்.** மதிப்புரைக்கு வந்தவை நம்மிடம் கிடையாது.

---

***ஹரிஹி நாராயண என எழுந்தவுடன் கூறுக!***
***ஸந்த்யாவந்தனத்தை சிரத்தையுடன் செய்க.***

# அக்நி காரியத்தின் விளக்கம்.

(பக்ஷிதீர்த்தம், ய. சுப்ரமண்யதீக்ஷிதர், ஸோமயாஜி)

*(4)* ஆஜ்ய ஸ்தாலியை வடபுறத்தில் ஏன் இறக்க வேண்டும்? கிழக்குத் திக்கில் இறக்கினுல் ஹோமம் செய்பவனுக்குத் தீமை ஏற்படும். தெற்குப் புறமாக இறக்கினுல் அந்த திக்கிலுள்ள பித்ருக்களுக்கு அது உரியதாகிவிடும். மேற்குத் திக்கில் இறக்கினுலோ ஹோமம் செய்பவரது பத்நிக்குத் தீங்கு ஏற்படும். ஆதலால் தேவர்க்கும் மாநிடருக்கும் நன்மை செய்யும் வடக்கு புறத்தில்தான் இறக்கவேண்டும்.

*(5)* **புநராஹார உத்பவந பலன்:** முன்னர் ப்ரணீதைக்குச் செய்ததுபோல் பவித்ரத்தால் ஆஜ்யத்தை மும்முறை கிழக்கு மேற்காக அறைப்பதுபோல் தள்ளுவது உத்பவநமாகும். ஏன் அப்படிச் செய்யவேண்டும்? என [3 அஷ். 3 ப்ர. 3 அநு.] கூறுகிறது. யஜமாநனை ஆஜ்யமாகவும் பவித்ரத்தை ப்ராணுபாநங்களாகவும் கருதி அப்படி பவித்ரத்தால் நெய்யைத் தள்ள வேண்டும். இதனுல் ப்ராணன் அபாநன் என்ற வாயுக்கள் யஜமானன் உடலில் நேராகவும் நன்ருகவும் ஸஞ்சரிக்கும். (இப்படி நினைப்பது உபநிஷத் கூறும் உபாஸனைபோலு மாகும்.)

*(6)* **தர்வீ ஸம்ஸ்காரம்:** எந்த பலாச இலைகளால் ஹோமம் செய்யப்போகிருேமோ அவைகளை அக்நியில் காய்ச்சி ப்ரோக்ஷிப்பது தர்வீ ஸம்ஸ்கார மெனப்படும். [3 அஷ். 3 ப்ர. 1 அநு.] இதன் பலனை விளக்குகிறது வேதம். முதலில் ஒருமுறை தர்விகளைத் தீயில் காய்ச்சும்போது அஸுரர்கள் ஓடிவிடுகிருர்கள். தர்ப்பத்தால் தர்விகளைத் துடைக்கிருேம். ஏற்கனவே கூறியபடி தீர்த்தத்தின் ஸாரம் தர்ப்பம். அதனுல் துடைக்கும்பொழுது தர்விகள் சுத்தமாகின்றன. மறுமுறை காய்ச்சுவதால் ஹோமம் செய்வதற்கேற்ற யோக்யதை உண்டாகின்றது. தீர்த்தமும் தீர்த்தத்தால் உண்டாகும் தர்ப்பமும் மழையினுல் அல்லவா உண்டாகின்றன? ஆதலால் தர்ப்பம் ஜலத்தின் வேருெரு ரூபம் எனத்தகும். அத்தகைய தர்ப்பத்தை வேறிடத்தில் எறிந்து வீணுக்காமல் அக்நியிலேயே போட

---

வேண்டும். அப்படிச் செய்வதால் நமக்கு ஸத்ஸந்தானமும் பசுக்களும் உண்டாகும்.

*(7)* **பரிதி**: அக்நிக்குக் கிழக்கைத் தவிர மற்ற மூன்று திக்குகளிலும் வைக்கும் மூன்று ஸமித்துகள் பரிதி எனப்படும். பலாசம் குமுதம் முதலிய ஸமித்துக்களில் ஒன்றைப் பரிதியாகக் கொள்ளவேண்டும். [1 கா. 1 ப்ர. 11 அநு.] பரிதிகள் போடுவதால் உண்டாகும் பலனை விவரிக்கின்றது: **மேற்கு பரிதி** யஜமானனைக் கொல்ல வரும் ராக்ஷஸர்களைக் கொல்லக்கூடிய வலிமை வாய்ந்தது. அது விச்வாவஸு என்ற கந்தர்வ ஸ்வரூபத்தை அடைந்து நம்மைக் காக்கின்றது. யஜமானனது ஆயுள் விருத்தியாகின்றது எனக் கருத்து.

**தென் திக்கில்** வைக்கும் பரிதி தேவேந்த்ரனது வலது கைபோலாகி சத்ருக்களைக் கொல்கின்றது. இந்திரியங்கள் நல் வழியில் விருத்தியாகும் என அதன் கருத்தாம்.

**வடக்கே** வைக்கும் பரிதி மித்ரா வருணர் என்ற தேவர்களைப் போலாகி நாம் செய்யும் கர்மாவை நல்ல பலனுள்ளதாகச் செய்கின்றது. பிராணாபாந வாயுக்கள் நம்மிடம் சரியான முறையிலிருக்குமெனக் கருத்து.

**கிழக்கே** பரிதிபோடுவதில்லை. ஏன்? கிழக்கே உதிக்கும் ஸூர்யனே கிழக்குப் பரிதியாக இருந்து எந்த வகையான தீங்கும் செய்யாதபடி ராக்ஷஸர்களைத் தடுப்பார். அன்றியும் அது தேவர்கள்வந்து ஹோமத்தைப் பெற்றுப் போகும் வழியாகுமாதலால் அதைத் தடைசெய்யாமல் இருப்பது போலும் ஆகும்.

*(8)* **ஆகார ஸமித்துகள்**; அக்நியில் நடுவதுபோல் இரு ஸமித்துக்களை ஆகாயத்தைப் பார்க்க நிறுத்துவது ஆகார ஸமித்துக்களாம். தெற்கே முதலில் வைத்து வடக்கில் பிறகு வைக்க வேண்டும். [3 அஷ். 3 ப்ர. 6 அநு.] இதைப்பற்றிக் கூறுகிறது. யஜமாநனால் விருத்தி செய்யப்பட்ட அக்நி அவனுக்கு ஸகலவிதமான ஸமிருத்தியையும் தருவார்.

*(9)* **பரிஷேசநம்**: அக்நியை ஜலத்தால் பிரதக்ஷணமாகச் சுற்றுவது பரிஷேசநமெனப்படும். வைத்யநாத தீக்ஷிதீய ஹோம ப்ரகரணம். அதிதே அநுமன்யஸ்வ. (தெற்கே ஆரம்பம்) தேவமாதாவான ஓ அதிதி தேவியே! நான்

---

அநுஷ்டானத்தை விட்டதால் மதிப்பை இழந்தோம்.

செய்யும் கர்மாவை ஆமோதித்து நற்பயனுள்ளதாகச் செய். (மேற்கே) அநுமதே அநுமன்யஸ்வ – சந்த்ரன் இல்லாத பௌர்ணமியே! இக்கர்மாவை ஆமோதித்து நற்பயனுள்ளதாகச் செய். (வடக்கே) ஸரஸ்வதே அநுமன்யஸ்வதியையும் பூர்ணமான பரிஷேசநத்தில் சூர்யனையும் முன்போல் வேண்டுகிறோம்.

(10) **ஆகாரஹோமம்:** வடமேற்கிலுள்ள இரு பரிதி ஸந்தியில் ஆரம்பித்து, குறுக்காக ஆஜ்யத்தை தாரையாக தெற்கு பரிதி நுனியில் படும்படி பிரதாந தர்வியால் "ஸ்வாஹா" என்று ஹோமம் செய்து இதர தர்வியால் தென்மேற்கு பரிதி ஸந்தியிலிருந்து வடக்கே உள்ள பரிதி வரை, முன்போல் ஹோமம் செய்வது ஆகார ஹோமம் எனப்படும்.

முதலில் செய்யும் ஆகார ஹோமம் ஸர்வதேவதா ஸ்வரூபியான பிரஜாபதியைச் சார்ந்தது என்றாலும் அவர் முக்ய பிரதாநதேவர் ஆனதால் ஸகல தேவர்களும் அந்த ஹோமத்தால் ஸந்தோஷம் அடைகிறார்கள். இரண்டாவது ஹோமம் நாம் ஸௌக்யமாக ஸ்வர்க்கம் செல்ல உதவுகின்றது. [3 அஷ். 3 ப்ர. 7 அநு.]

(11) **ஸ்வாஹா:** ஸகல தேவதா ஹோமங்களிலும் ஸ்வாஹா என்று கூறியே ஹோமம் செய்கிறோம். ஸ்வாஹா என்பது தேவியின் அம்சம். அக்நி தேவரின் பத்நீ என புராணம் கூறுகிறது. இங்கு வேதம் கூறுகிறது ஸ்வாஹா என்பதன் பொருளை. [2 அஷ். 1 ப்ர. அநு. 2.]

பிரும்மா அக்நி முதலான ஸகல தேவர்களையும் படைத்துவிட்டு ஒரு ஸமயம் அக்நியில் ஹோமம் செய்வோமா? அல்லது வேண்டாமா? என ஸந்தேஹப்பட்டுக் கொண்டிருந்தார். அச்சமயம் "ஹோமம் செய்" என அசரீரியான ஒரு வாக்கு உண்டாயிற்று. பிரும்மா இதைக் கேட்டு, நீ யார்? இப்படிக் கூறியது? என்று கேட்டார். "நான் உம்முடைய வாக்குதான்" என்று அது பதில் கூறிற்று. ஸு – நன்றாக, ஆஹா – சொல்லிற்று என்ற பொருள் உள்ள ஸ்வாஹா என்பதைக் கொண்டே பிரும்மா முதல்முதலில் ஹோமம் செய்தார். இம்மாதிரி ஸ்வாஹா என்பதை நன்கு உணர்ந்து ஹோமம் செய்பவருக்கு ஸகலவிதமான சௌக்யமும் உண்டாகும்.

---

**நாம் மாத்ரம் கெடவில்லை! பாமரரையும் கெடுத்தோம்.**

(12) **சிறிய உணவு பெரிய தேவர்களுக்குப் போதுமா?** ஒவ்வொரு தேவதைகளேயும் நாடி நாம் செய்யும் ஹோமம் மிக ஸ்வல்பமேயாகும். நம்மைவிட உயர்ந்தவர் பெரியவர் தேவர். அவர்களுக்கு இது வயிறு நிரம்ப உணவாகுமா? என்ற ஸந்தேஹத்திற்கு ஶ்ருதி பதில் கூறுகிறது. [3 அஷ். 2 ப்ர. 6 அநு] நாம் கொடுக்கும் ஆஹாரம் தேவதைகளுக்கு வயிறு நிறைந்து திருப்தி அடைய எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு பெரியதாக ஆகின்றது.

(13) **லேப கார்யம்:** நெய் ஸம்மந்தப்பட்ட பாத்ர ஸாதநம் செய்த தர்ப்பங்களே ஆஜ்ய பாத்திரத்தின் தென்புறத்தில் பிரதாந தர்வியையும் இவ்விரண்டிற்கும் நடுவில் இதர தர்வியையும் வைத்து பிரதாந தர்வியில் அந்த தர்ப்பத்தின் நுனியையும் இதர தர்வியில் நடுப்பாகத்தையும் ஆஜ்ய ஸ்தாலியில் அடிபாகத்தையும் வைத்து மும்முறை துடைத்து அதை ஹோமம் செய்வது லேபகார்யம் எனப்படும்.

இதனுல் உண்டாகும் பயன் யாது? என்பதை ஶ்ருதி கூறுகிறது. [3 அஷ். 3 ப்ர. 9 அநு.] இதனுல் இதுவரை நாம் செய்த பிரதான ஆஹுதி முதலான ஸகல கர்மாக்களும் பூர்ண, சிறந்த பலமுள்ளதாக ஆகிறது. அன்றியும் அக்நிபகவான் நம்மையும் விசேஷமாக நமது ஸந்ததியையும் ரக்ஷித்து ஆசீர்வதிப்பார்.

அந்த தர்ப்பங்களில் ஒன்றை எடுத்து வைத்துக்கொண்டே மற்றவைகளே அக்நியில் வைக்கவேண்டும். அதன்பின் இந்த ஒன்றையும் அக்நியில் வைத்து 3 முறை விரலால் **நிர்தேசநம்** செய்து அக்நியை அபிமந்தரணம் செய்து பூமியைத் தொடவேண்டும். நிர்தேசநத்தால் ஆயுஸ் விருத்தியாகும், கண் ப்ரகாசமாகத் தெரியும்.

(14) **பிரிதி ப்ரஹரணம்:** அக்நியைச் சுற்றி மூன்று புறங்களிலும் வைக்கப்பட்ட ஸமித்துகளில் நடு ஸமித்தை முதலில் அக்நியில்வைத்து மற்ற இரண்டுகளேயும் சேர்த்து வைப்பது பரிதி ப்ரகரணமெனப்படும். முதல் பரிதியை வைப்பதால் அக்நி ஸந்தோஷமடைந்து நமது பகைவர்களேக்கூட நம்மிடத்தில் பிரியமாக இருக்கும்படிச் செய்கிருர். மற்ற இரண்டுகளேயும் வைப்பதால் தெய்விகமான அநுகூலங்கள் நிரையக் கிடைக்கும். இத்துடன் அக்நியில் செய்யும் பிரதான கார்யங்கள் பூர்த்தியாகின்றன. இனி உத்தராங்கம் ஆரம்பமாகிறது.

---

# சாந்தோக்ய உபநிஷத்.

ஸகல உலகங்களையும் படைத்த பிரும்மா உலகத்தில் எதுமிக்க ஸாரமுள்ளது? என யோசித்தார். ரிக் யஜுஸ் ஸாம என்ற 3 வேதங்களே உலகில் ஸாரமுள்ளவை. அதாவது உலகை நன்கு ரக்ஷிக்கும் சக்திவாய்ந்தன என உணர்ந்தார். மறுபடியும் அந்த வேதத்திலும் ஸாரமானது எது? என யோசித்தார். மூன்று வ்யாஹ்ருதிகளே மிக்க ஸாரமுள்ளதென உணர்ந்தார். அதாவது பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் என்ற மூன்று லோகமும் ஒன்றை ஒன்று பிடித்து இழுத்துக்கொண்டு ஸகல வஸ்துக்களையும் தனக்குள் அடக்கிவைத்திருப்பதால் ஸாரமுள்ளவை. அம்மூன்று உலகங்களின் பெயரே வ்யாஹ்ருதியாம். வ்யாஹ்ருதி என்ற சொல்லுக்கு விசேஷமாக எல்லாவற்றையும் பிடித்திழுத்துக் கொண்டிருக்கிறது என்று பொருள்.

இந்த வ்யாஹ்ருதிகளுக்குள்ளும் எது ஸாரம் என மறுபடியும் யோசித்தார். பிரணவமே (ஓம்) ஸாரமென நிச்சயித்தார். பிரணவம் பிரும்மத்தின் சரீரமாகும். அதுதான் எல்லா சப்தங்களையும் சப்தத்தால் உண்டான உலகையும், காம்பு இலைகளைப் பிடித்திருப்பது போல் பிடித்திருக்கிறது. ஆதலால் எல்லாம் ஓங்காரமே. அதே உலகில் ஸாரமான வஸ்து.

யாகத்தில் காலையில் செய்யப்படும் ஒருவித கர்மாவிற்கு ப்ராதஸ் ஸவநமென்றும் மத்யான்ஹத்தில் செய்வதை மாத்யந்திந ஸவநமென்றும், ஸாயங்காலம் செய்வதை த்ருதீயஸவநமென்றும் கூறுவர் க்ஞாநிகள். ப்ராதஸ்ஸவநம் வஸுக்களுக்கும் மாத்யந்திநஸவநம் ருத்ரர்களுக்கும் த்ருதீயஸவநம் ஆதித்யர்களுக்கும் விச்வே தேவர்களுக்கும் ஏற்றவைகளாம். முறையே பூமி ஆகாசம் ஸ்வர்க்கம் இவைகள் அவர்களுக்கு வசமாயிருக்கின்றன.

## மூன்றாவது ப்ரபாடகம்.

மது வித்யோபாஸநம் கூறப்படுகிறது. இந்த ஸூர்யன் தேவமது. தேவர்களுக்குத் தேன். அதற்கு ஸ்வர்க்க லோகமே தேனடை கட்டும் குறுக்கு மூங்கில்கிளை போலிருப்பது. அருகிலுள்ள அந்தரிக்ஷ லோகமே தேனடை.

---

பூமியிலிருந்து ஸூர்யனுல் ஆகர்ஷிக்கப்படும் ஜலமயமான கிரணங்களே புத்ரர்போல் ஹிதம் செய்யும் வண்டுகளாம், கிழக்கிலுள்ள ஸூர்ய கிரணங்கள் தேனடையில் கிழக்கிலுள்ள த்வாரங்களாகும். ரிக்குகள் தேனைக்கொண்டு வந்து தேனடையில் வைக்கும் தேனீக்களாம். ரிக்வேதத்தில் கூறியபடி செய்யப்படும் கர்மா தேனுள்ள புஷ்பங்களாம். யாகத்தில் பயன்பட்டு சூர்யனிடம் வரும் நெய் ஸோமரஸம் முதலிய ரஸங்கள் புஷ்பங்களிலுள்ள தேனுகும். ரிக்கெனும் தேனீக்கள் யாகமெனும் புஷ்பத்திலிருந்து நெய் ஹோமம் எனும் தேனை எடுத்துவந்து யாகமாகும் புஷ்பத்தை முடிக்கின்றன. அதிலிருந்து யஶஸ் தேஜஸ் பலம் வீர்யம் அன்னத்தை உண்ணும் சக்தி ஆகிய தேன் உண்டாகிறது. சிவந்த தேனே ஸூர்யனது ரூபமாம்.

ஸூர்யனுடைய தெற்குப் பக்கத்திலுள்ள கிரணங்களில் யஜுஸ்ஸுகள் தேன் ஈக்கள். யஜுர்வேத கர்மாக்கள் புஷ்பங்களாகும். இவைகள் ஸூர்யனுடைய வெண்மைநிறம் வாய்ந்த ரூபம்.

மேற்கு கிரணங்களில் ஸாமங்கள் தேனீக்கள். ஸாமவேதம் கூறிய கர்மா புஷ்பம். இவை அவருடைய கறுப்பு ரூபமாகும்.

வடக்கிலுள்ள கிரணங்களில் அதர்வாங்கீரஸ் தேனீக்களாம். இதிஹாஸ புராணங்கள் புஷ்பங்களாகும். இது ஸூர்யனுடைய சுத்த கறுப்பு ரூபம்.

அவருடைய மேலே உள்ள கிரணங்களில் வேதாந்த ரஹஸ்யங்கள் தேனீக்கள். ஓம் என்பது புஷ்பம். சஞ்சரித்துக்கொண்டிருக்கும் ஜோதிர் மயமான அம்ஶமே ரூபம்.

மேலே கூறப்பட்ட சிவப்பு வர்ணமுள்ளது போன்ற ரூபங்கள் ரஸங்களாகும். அவை எல்லா ரஸங்களுக்கும் ரஸங்கள். அம்ருதங்களுக்குள் அம்ருதமானவைகள்.

இவைகளுக்குள் முதலாவதான அம்ருதத்தை வஸுக்கள் அக்நிமுகமாக புஜித்து ஜீவித்திருக்கின்றூர்கள். தேவர்கள் அதை உண்பதுமில்லை, குடிப்பதுமில்லை. ஆனுல் அதைப்பார்த்து ஸந்தோஷமடைகிறூர்கள். அந்த அம்ருத ரூபத்தில் பிரவேசித்து உத்ஸாஹத்துடன் இருக்கிறூர்கள்.

---

ஹிந்து பாமரரையே பாதிரிகள் லேசாக இழுக்கிறூர்கள்.

# அஷ்டாவக்ர கீதை.

**12-ம் அத்யாயம்.** ஶிஷ்யன் கூறுகிறுன்: ஸத் குரோ! முன்னம் உடலின் கார்யத்தையும் அதனுல் உண்டாகும் துன்பத்தையும் ஸஹிக்க முடியாதென்றிருந்தேன். அதே போல் வாக்காலும் மநதாலும் செய்யும் கார்யத்தைத் தடுக்க முடியாதென்றும் அவைகளின் இன்ப துன்பங்களே ஸஹிக்க முடியாதென்றும் கருதினேன். உமதருளால் இப்பொழுது ஸஹிக்கும் ஶக்தி பெற்றேன்.

பாட்டு நடனம் முதலிய விஷயங்களில் ஆசை இல்லாததாலும் ஆத்மா ஸ்தூல நேத்ரத்தால் காணப்படாததாலும் மனம் ஏகாக்ரப்பட்டதாலும் நான் இத்தகைய முடிவிற்கு வந்தேன்.

ஸமாதி உண்டாகாமல் தடுப்பது ப்ரும்மத்தினிடம் ஆரோபணம் செய்யப்பட்ட உலகம் முதலிய வ்யவஹாரங்கள் என்பதை உணர்ந்தேன். ஆதலால் இந்நிலேயை அடைந்தேன்.

ஸத்குரோ இது வெறுக்கத்தக்கது, இது விரும்பத் தக்கது என்பதை விட்டேன். அதனுல் எனக்கு ஸந்தோஷமோ துக்கமோ கிடையாது.

இது ப்ரும்மசர்யம் முதலிய ஆஶ்ரமம், இது ஆஶ்ரமமில்லாமை, இது த்யானம், இது த்யானமில்லாமை இவை மனதின் விகல்பமேயாம் என்பதை உணர்ந்து ப்ரும்மஸ்வரூபத்தை அடைந்தேன்.

கர்மாக்களே அனுஷ்டிப்பதும் அவைகளே விடுவதும் அக்ஞானத்திஞல்தான் ஏற்படுகின்றன என நன்கு உணர்ந்து ப்ரும்மஸ்வரூபஞக ஆனேன்.

சிந்திக்கமுடியாத ஒன்றை ஸதா சிந்திப்பதால் சிந்தைக்கேற்றபடி அது சிந்திக்கப்படும் வஸ்துவாக ஆகின்றது. ஆதலால் அந்த சிந்தையை விட்டு ப்ரும்ம ஸ்வரூபஞக ஆனேன்.

எனது அனுபவத்தை ஒட்டி கார்யம் செய்பவனும் நிஜேப்பவனும் க்ருதார்த்தஞக ஆவான்.

**13-ம் அத்யாயம்:** ஒன்றுமில்லாத மநோநிலேயில் உண்டாகும் சுகம் கௌபீந மாத்ரதாரியாக இருக்கும் ஸ்திதியில் கூட கிடைக்காது. ஆதலால் ஒன்றை ஏற்றுக்

---

**முஹமதியரை கிருஸ்தவரை அதிகம் இழுக்கமுடிவதில்லே.**

கொள்வது, ஒன்றை த்யானம் செய்வது என்பதை விட்டு விட்டு ஸுகமாக இருக்கிறேன்.

உடலுக்கு ஏற்பட்ட ஏதோ ஒரு கஷ்டம். நாவுக்கு ஏற்பட்ட ஏதோ ஒரு துக்கம். மனதிற்கு ஏற்பட்ட ஒரு கஷ்டம் இவைகளை உதரித்தள்ளி மோக்ஷ நிலையிலிருந்து ஸுகத்தை அனுபவிக்கிறேன்.

நான் என்பவன் ஒன்றையும் செய்வதில்லை என்ற தத்துவத்தை உணர்ந்து ஏதேனும் உடலால் செய்யவேண்டிய காரியம் வந்தால் அதைச் செய்து கர்ம ஸம்மந்தம் இல்லாமல் ஸுகமாக இருக்கிறேன்.

ஒருகர்மா செய்வது, கர்மாவை விட்டுவிட்டு பேசாமலிருப்பது ஒன்றுடன்சேருவது, ஒன்றைவிடுவது முதலியவைகள் எல்லாம் உடலை நான் என எண்ணுபவனுக்கேயாம். எனக்கில்லை. நான் அமர்ந்திருப்பது நடப்பது படுப்பது நிற்பது போவது தூங்குவது என்பவைகளால் எனக்கு யாதொரு லாபமோ நஷ்டமோ கிடையாது.

தூங்கினதால் எனக்கு ஒருநஷ்டமுமில்லை. விழித்திருந்து ஏதோ வேலைசெய்ததால் எனக்கொரு ஸித்தியுமில்லை. லாபநஷ்டங்களை ஒன்றையும் எண்ணுமல் ஆத்மநிலையில் ஆநந்தமாக இருக்கிறேன்.

சுகம் துன்பம் என்பன மனதிலைல்தான் கற்பிக்கப்பட்டவை. அவைகளும் ஸ்திரமாகவும் இருப்பதில்லை. இன்று ஸுகமென்பது நாளைக்குக் கஷ்டமாகிறது. இன்று கஷ்டமென்பது நாளைக்கு ஸுகமாகமாருகிறது. அவைகளை அடியோடு மறந்து யான் ஸுகமாக இருக்கிறேன்.

**14-ம் அத்தியாயம்:** இயற்கையாகவே ஒன்றும் அறியாத நான் ஸத்யத்தைவிட்டு எதுஎதையோ ஸத்யம் ஸுகம் என ஏமார்ந்து நல்விஷயத்தில் உறங்கிக்கிடந்தேன். குருவின்கிருபையால் விழித்துக் கொண்டேன். எனது ஸம்ஸாரதாபமகன்றது. ஆசார்யனது அருளால் ஆசையை அகற்றியபின் எனக்குப் பொருள் ஏது? நண்பன் யார்? விஷயமெனும் திருடர்கள் எங்கே? சாஸ்ரம் தான் எதற்கு?

ஸாக்ஷிரூபனை பரமாத்மாவை யான் உணர்ந்தபின் வைராக்யம் பந்தமோக்ஷம் முக்திஇவைகளைப்பற்றிய சிந்தையே எனக்கில்லை.

---



# பால பாரதம்

பாலர் பகுதி

## துரோண பர்வா.

கே: பகவான் அர்ஜுநனைக் காக்கச் செய்த அரும் முயற்சி யாது?

ப: பகவான், அர்ஜுந! இப்படி கடுமையாக பிரதிக்ஞை செய்து விட்டாயே? இது ஸாத்யமா? அர்ஜுநன்: தங்களது கருணை இருந்தால் எதுதான் ஸாத்யமாகாது? கிருஷ்ணன்: இன்றிரவு பகவான் திரியம்பகனுக்குப்பூஜை செய்யவேண்டுமென, அங்ஙனமே பூஜை நடந்தது. தூங்கும்பொழுது ஸ்வப்நம் காண்பதுபோல் பகவான் அர்ஜுநனை கைலாஸம் அழைத்துச்சென்று சிவனிடமிருந்து பாசுபதாஸ்திரத்தை வாங்கித் தந்தார்.

கே: இது அவனுக்காக தனியாக வாங்கிய பாசுபதமா? அதனால் ஜயத்ரதனைக் கொல்லலாம். ஜயத்ரதனை அணுகவிடாமல் செய்தால் என்செய்வது?

ப: துரோணர் சகடவ்யூஹம் அமைத்து இடையில் ஜாக்ரதையாக ஜயத்ரதனை அமர்த்தினர். தனக்கு ஸமமான ஸாத்யகியிடம் தர்மரை ஒப்படைத்து முழுமூச்சுடன் அர்ஜுனன் உள்ளே புகுந்தான்.

கே: வீரர்கள் அவனைத் தடுத்திருப்பார்களே!

ப: ஒருவரா? இருவரா? துரோணர், துச்சாஸனன், துர்யோதனன், பூரிஸ்ரவஸ் முதலிய எட்டு வீரர்கள்! அனைவரையும் தோல்வியடையும்படிச் செய்தான். ஸ்ருதாயு முதலிய எண்ணிறந்த வீரர்களைக் கொன்று குவித்தான். வ்யூஹத்தைப் பிளந்து உள்ளே புகுந்தான் வீர அர்ஜுனன்.

கே: அர்ஜுநன் ப்ரதிக்ஞையை நிறைவேற்றிவிடுவான் போல் இருக்கிறதே!

ப: பகவானது தந்த்ரத்தால் நிறைவேற்றத்தான் போகிருன்.

கே: என்ன தந்த்ரம் செய்தார் அதற்கு?

ப: அது கார்யம் முடிந்தபின்புதான் பார்த்தனுக்குக் கூடத் தெரிந்தது! பாதிவழியில் தேரை நிறுத்தி

---

ஆதலால் அவர்களை இழுப்பது கடினமாயிருக்கிறது.

பார்த்த! குதிரை களைத்துவிட்டது! இனி ஓரடிகூட வைக்காது என்றார்.

கே: முன்னும் பின்னும் சத்ரு ஸேனை! குதிரைக்கு நீர் காட்டக்கூட முடியாதே! என்ன செய்தான்? பாவம்.

ப: கிருஷ்ணன் அருள்! குருவின் அருள்! தர்மரின் அருள் பெற்றவனல்லவா பார்த்தன்! ஒரு சரக் கூடு கட்டி பகைவர் கோஷ்டி உள்ளே வராதபடி தடுத்தான். ஒரு பாணத்தால் பூமியிலிருந்து குளம்போல் ஜலம் வரும்படிச் செய்தான். பகவான் தேரிலிருந்து குதிரைகளை அவிழ்த்து அதில் நீர்காட்டி களைப்பு நீங்க நீராட்டினார்.

கே: ஆஹா! ஆய்சர்யம்! இதனால் காலதாமதம் ஆகாதோ?

ப: காலதாமதமாவதற்காகவேதான் இந்தக் கார்யத்தை ஆரம்பித்தார். பகவான் ஓட்டும் குதிரைக்கு நீரா வேண்டும்?

கே: பகவான் என்ன செய்தார் மேலே?

ப: கொஞ்ச தூரம் ஸேனையைப் பிளந்து கொண்டு முன் செல்வது போல் சென்றார். சிறிது நேரந் தான் இருந்தது ஸூர்ய அஸ்தமனமாக. ஒருவரும் அறியாமல் திடீரென தனதுசக்ரத்தால் ஸூர்யனை மறைத்து விட்டார் பகவான்.

கே: அர்ஜூனன் தான் சபதம் செய்தபடி அக்நி பிரவேசம் செய்வானே பாபம்!

ப: அவன் மாத்ரமா? பாண்டவர் ஐவருமே தீயில் இறங்க ஆரம்பித்தனர்.

கே: இது கௌரவருக்கு மிக்க ஸந்தோஷமாக இருக்குமே!

ப: ஜயத்ரதனே யானைமீதமர்ந்து வேடிக்கைப் பார்க்க வந்து விட்டான். உடனே பகவான் சக்ரத்தை அகற்றினார். இன்னும் ஸூர்யன் இருக்கிறானே என்று ஜயத்ரதன் தலையைத் தூக்கிப்பார்த்தான்.

---

பகவான் அர்ஜுந ! அவன் தலையை அறுத்துத் தள் என்றார்.

கே: அப்பா ! பேராபத்தலிருந்து பகவான் அர்ஜுநனை காப்பாற்றினார். அவன் தலையை வெட்டியிருப் பான் !

ப: அதேஸமயம் மற்றொருபேராபத்திலிருந்து அவனை ரக்ஷித்தது இன்னும் ஆச்சர்யம் கேள் !

கே: அதென்ன கூறு கூறு!!

ப: அவன் தலையைக் கீழே தள்ளாமல் காட்டில் ஸந்த் யாநுஷ்டாநம் செய்யும் விருத்தக்ஷத்ரன் மடியில் கொண்டு போடென்றார். அவன் சரமும் அங்ங னமே செய்ய விருத்தக்ஷத்ரனும் உடனே இறந் தான்.

கே: ஆஹா! இதென்ன ஆஶ்சர்யம்? அவன் யார்? ஏனிறந்தான்?

ப: ஜயத்ரதனது தந்தை அவன்! அவன் யார் கை யால் என் புத்ரனது தலை பூமியில் தள்ளப் படு கிறதோ அவன் இறக்கவேண்டுமென வரம் வாங்கி யிருந்தான்.

கே: ஆஹாஹா ! ஆஶ்சர்யம் ! பகவான் ஸர்வக்ஞன். இதை உணர்ந்து ஸமயத்தில் இதைச் செய்திரா விடில் அர்ஜுநன் இறந்திருப்பான் ! ஒரு ஆபத்தி லிருந்து காப்பாற்றி மற்றோர் ஆபத்திற்கு ஆளா காமல் செய்தார். பகவானைக் கொண்டாடுவதா? சொன்னபடி மநுஷ்யனைப் போல் நடக்கும் அர் ஜுநன் சரத்தைக் கொண்டாடுவதா?

ப: இதாவது பகவான் லீலை ! முன்னே நடந்தது! தற் போது நடந்த இந்த விஷயமான ஒரு வேடிக்கையை கேள்.

புதுச்சேரியில் ஒரு ஸமயம் இதே கதையைக் கூறி னார் நமது ஆசிரியரின் தந்தை! அச்சமயம் தமி ழறிந்த பிரஞ்சு கவர்னர் இதைக்கேட்டு அவன் ஜாதி வழக்கப்படி நடு ஸபையில் முட்டாள் ! முட் டாள் ! என விரல்களை உதறினான்.

---

ஏன்? பால்யத்தில் காயத்ரீ ஜபம் செய்ததால் தான்.

கே: யாரை முட்டாள் என்ருன்?

ப: ஜயத்ரதனும் அவனைச்சார்ந்தவரும் ஒரு சிறிய கை கடிகாரமிருந்தால் ஏமார்ந்திருக்கவேண்டாமே அது இல்லாததால் முட்டாளாக ஏமார்ந்தார்கள் என்ருன் அவன்.

கே: அது உண்மைதானே! 6 மணிக்கு அஸ்தமன மானுல் கடிகாரம் 5-45 என்று காட்டி இன்னும் அஸ்தமனமாகவில்லை என ஜயத்ரதன் வராமலி ருந்திருக்கலாமே! சாகாமலும் இருந்திருக்கலாமே!

ப: நீ ஒரு முட்டாள்! ஸமயோசிதமாக அந்த புரா ணிகர் கூறியதைக் கேள்! பிறகு விளங்கும்!

கே: என்ன சொன்னுர் கூறு, கேட்போம்?

ப: ஸபையிலுள்ளோர் கவர்னர் சொல்லை ஆமோதிக் கும் வகையில் ஒரே ஆரவாரம் செய்தனர். புரா ணிகர் அந்த சத்தம் அடங்கிய உடன் 'கவர்னரே' மூவ்வுலகிலும் ஜோதிர்மயமாக பிரகாசிக்கும் ஸூர்யனையே மறைத்தகிருஷ்ணனுக்கு கடிகாரத் தின் முள்ளைத் திருப்புவது ஒரு கஷ்டமா? என்ருர்

கே: பேஷ்! பேஷ்! மறுபடியும் ஸபையில் ஆச்சர்ய ஆரவாரம் கிளம்பியிருக்குமே! மேலே பாரதக் கதையைக் கூறு.

ப: கௌரவர் சொல்ல முடியாத துன்பத்தை அனு பவித்து இன்று இரவும் யுத்தம் நடத்துவோமென் றனர். துர்யோதனன், துரோணர் அர்ஜுனனிடம் அன்பு காட்டி ஜயத்ரதனைக் கொல்ல வழிதேடினுர் என்ருன். கர்ணன் அதை மறுத்து தெய்வாநு க்ரஹத்தால் இது நேர்ந்ததென்ருன். அன்றிரவு யுத்தம் நடந்தது.

கே: ராத்ரி யுத்தம் இருட்டில் மிகக் கஷ்டமல்லவா? எப்படி நடந்தது?

ப: கஷ்டமாயினும் துஷ்டருடன் யுத்தம்செய்துதானே ஆகவேண்டும்? அவ்விரவிலும் பீமன் துர்யோத நன் தம்பிகளில் பலரையும் சகுனியின் தம்பியை யும் கொன்ருன்.

---

**இளமையிலேயே பூணல் போடுங்கள்.**

# உபமன்யு பக்த விலாஸம்.

## 18. ருத்ர பசுபதி.

ருத்ரபஶுபதி எனக்காரணப் பெயர் பெற்ற பிராம்மண பக்தர் சோழ நாட்டில் ஸ்ரீமுக்ய திருத்தலையூரில் தோன்றியவர். வேதத்தின் ஸாரமான ஸ்ரீருத்ரத்தை ஸதா ஜபிப்பார். அதனுலவர் ஶிவஸாயுஜ்யம் அடைந்தார். (ஸ்ரீ ருத்ரம் வேதஸாரம்.)

## 19. திருநாளைப்போவார் (ச்வோகந்தா)

[இது நந்தனர் சரிதம். 45 சுலோகமுள்ளது. அதிலுள்ள கருத்தை மாத்ரம் விடாமல் எழுதுகிறேம்]

மேற்கா நாடு - ஊர்த்வாங்ரிபுரம் என்ற பிரதேசத்தில் ஆஸநபுரம்—ஆதனூர் என்ருேர் ஊர் உண்டு. அங்கு பூர்வஜன்ம கர்மாவினல் பஞ்சமனகப் பிறந்த நந்தன் என்பவன், உடல் எந்த வேலை செய்தாலும் உள்ளே சிவனையே ஸதா நினைத்து வாயால் அவன் பெயரைப் பாடி வந்தான். அவனுக்குச் சிதம்பரம் போக அவா. ஒவ்வொரு நாளும் நாளைக்குப் போகிறேன் என தீர்மானிப்பான். அதற்குப் பல தடங்கல்கள் வரும். மறுநாள் போவதாக எண்ணுவான். அதனல் திருநாளைப்போவார் எனப் பெயர் வழங்கிற்று. கோளாவாகிநீ என்ற கொள்ளிடக் கரையில் ஸ்ரீ காஞ்ஜபுரம், திருப்புங்கூர் என்ற க்ஷேத்ரத்திற்குச் சென்று வெளியிலிருந்தே கோவிலைச் சுற்றி வந்தார். தூரத்திலிருந்தே ஸ்வாமி தர்சனம் செய்தார். பெரிய நந்தி ஸ்வாமியை மறைத்து நின்றதால் ஐயோ! தர்சனம் கிடைக்கவில்லையே எனக் கதறினர். பகவான் நந்தியை விலகச் சொல்லி தர்ஶநம் தந்தார். (இன்றைக்கும் திருப்புங்கூரில் நந்தி விலகி இருப்பதைக் காணலாம்) திவ்ய தர்சநம் செய்தார். மாட்டுத்தோலைக் கொண்டு ஆலய வாத்யங்களுக்கு வார்கட்டுவது முதலிய கைங்கர்யம் செய்து வந்தார்.

முடிவில் ஒருநாள் சிதம்பரமுஞ் சென்ருர். யக்ஞயாகாதிகளும் வேத த்வநியும் நிறைந்த அந்த இடத்தில் உள்ளே செல்ல அஞ்சினர். ஆனல் வெகு தூரத்

திலிருந்து ஆலயத்தை பிரதக்ஷிணம் செய்து பல நாளாக நடராஜ தர்ஶநம் கிடைக்குமா என உள்ளங் கரையக் கதறினர். நீ தீயி லிறங்கி இவ்வுடலை விட்டு திவ்ய சரீரத்துடன் என் னருகில் வரலாமென அவ ருக்கு ஒரு ஸ்வப்னமானது. அதேபோல் தீக்ஷிதர்களுக் கும் ஸ்வப்நத்தில் பகவான் கூற கோபுரத்திற்கு வெளி யிலே தீமூட்டினர்கள். நந்தன் அதிலிறங்கி திவ்ய ஶரீரத்துடன் பகவானிடம் வந்து லயமானர். (ஜாதிக் கேற்ற தர்மத்தால் சிவன் அருள் புரிவர்.)

## 20. திருக்குறிப்பு தொண்டர் (விசாரபக்தர்.)

காஞ்சீ மண்டலத்திலே வண்ணர் ஜாதியில் பக்தர் களின் குறிப்பை அறிந்து தொண்டுசெய்யும் ஒரு சிவ பக்தரிருந்தார். பக்தர்களது வஸ்த்ரத்திலுள்ள அழுக்கை அகற்றி வெளுத்தால் பிறவி மலம் அகன்று ஸ்வப்ரகாச மான இறைவனை அடைய லாமென அவரது நினைவு. ஊதியம் பெருமல் இப்படித் தொண்டு செய்வதுடன் உடலில் விபூதி, வாக்கில் சிவ நாமம். மநதில் சிவன். இவருக்குக் கைலாஸம் அளிக்கக் கருதினர் சிவனர். அவர் வீட்டருகே அழுக் கடைந்த வஸ்த்ரத்துடன் சைவரைப்போல் வந்தார். வழக்கப்படி அவர் அழுக்கு வஸ்த்திரத்தை வெளுத்துத் தருவதாக தொண்டர்கேட்க சைவர், இரவில் இதைப் போத்துக் கொள்ளாவிடில் என் உயிரே போகும். அழுக்கோடிருந்தாலும் இருக்கட்டும் என்ருர். மாலைக்குள்ளேயே உமக் களிப்பேன் என பலவந்த மாக அதை வாங்கினர் விசார பக்தர். அதை நீரில் நனைத்தவுடன் கார்மேகஞ் சூழ்ந்து கடும் மழை பெய் தது. சிவ லீலையால் மாலை வரை மழை நிற்கவில்லை. என் செய்வார்? அடியா ருக்குச்சொன்னபடி செய்ய முடியாதவர் பிழைத்திருப் பது பாபம்! என எண்ணி னர். தன் உயிரை மாய்த் துக் கொள்ள துணிதோய்க் கும் கருங்கல்லிலே தனது தலையை மோதினர். அவ ரது உருதியைக் கண்ட ருத்ரன் அதைத் தடுத்து அவரைக் கைலைக் கழைத்து சென்ருர். (ஸ்வதர்மத் தைச் செய்வதும் ஸத்யமும் சிவ பக்தியாம்.)

---

ஔபாஸந, தர்ப்பண, ஶ்ராத்த மந்த்ரம் கற்க.

## 21. சண்டேசர் (விசார சர்மா.)

சோழநாட்டில் மணியாற்றின் தென்கரையில் திருச்சேய்நல்லூர் (ஸ்கந்தபுரம்) என்ற ஊரில் பிராம்மண ஜாதியில் யக்ஞ தத்தன் என்றோர் வேதியரிருத்தார். பவித்ரா என்பவள் அவர் மனைவி. இருவரும் பெயருக்கேற்ற செயலுள்ளவர்கள். இவர்களது புத்ரனே சண்டேசன். சிறிது கோபமுள்ளதால் அப்பெயர் வந்தது. ஸாரமெது அஸாரமெது என விசாரித்து ஸாரத்தை ஏற்பதால் விசார சர்மா எனப்படுவர். குலத்திற்கேற்ற தர்மமுள்ளவர். ஒரு நாள் யாதவன் ஒருவன் பசுவை முறட்டுத்தனமாக அடிப்பதைக் கண்டார். மனம் கரைந்தது. இனி முதல் யானே ஊரிலுள்ளோர் பசுக்களை மேய்ப்பேன். உற்ற ஊதியத்தை நீ பெறலாம் என்று கூறி, ஸகல கோக்களையும் மேய்த்தார். சித்தம் சிவனிடமிருக்கும். வாக்கு சிவநாமத்தையே கூறும். உடல் உரிய கர்மாநுஷ்டாநங்களைச் செய்யும். கோவினிடம் ஸமஸ்த தேவதைகளுமிருக்கின்றனர், என்பதை உணர்ந்து கோக்களுக்குப் பணிவிடைசெய்வார். பக்தனுல் பாவிக்கப்பட்ட பசுக்கள் குடம் குடமாகப் பால் தந்தன. அவை மேயும் பொழுது மணியாற்றிலே மணலாலாகிய லிங்கத்தைச்செய்து பூஜித்தார். பசுக்களும் வலுவிலே வந்து ஒரு ஸ்தநத்தின பாலை லிங்காபிஷேகத்திற்குதரும். அதனுல் பால் குறையவில்லை. என்றுலும் ஊரார் ஒன்று கூடி உன் மகன் செயலால் ஏற்படும் நஷ்டத்தைக் கவனியாமல் இருக்கின்றுயே! என்றனர். தந்தை பிராம்மண பக்தன். தநயன் செயலுக்கு வருந்தினுன்.

ஒருநாள் என்ன நடக்கிறதென்று அறிய மறைந்திருந்து தந்தை பார்த்தார். கோபங்கொண்டு சிவபூஜை செய்யும் சிறுவனைத் தடியால் ஓங்கி அடித்தார். அவனது ஹ்ருதய கமலத்திலுள்ள ஶிவன் ஏற்ருர் அதை. சண்டேசன் கண்ணைத்திறக்கவில்லை. அருகிலுள்ள பூஜைக்காக வைத்திருந்த பொருள்களையும் பால் குடத்தையும் காலால் உதைத்துத் தள்ளினுர் தந்தை. கண்ணைத் திறந்து சிவாபசாரம்செய்தவர் யார் என பார்த்தான். தந்தை! யாராயிருந்தாலென்ன? என சினங் கொண்டான். அருகிலுள்ள தடியை எடுத்

தான். அது அவன் கருத்துப் படி கோடாலியாக அமைந் தது. ஒரே வெட்டாக வெட்டினுர் அவர் கால்களை. அவர் விழுந்தார். சிறுவன் தடை அகன்றதென ஸந் தோஷத்துடன் பூஜையைச் செய்து முடித்தான்.

தந்தை எனும் பாசத்தை அறுத்துத் தனது பூஜையில் தளராத முயற்சி கொண் டான். இறைவன் இவனே எனது அந்தரங்க பக்தன் என எண்ணினுர். தனது அருகே வைத்துக் கொண்டு தனது நிர்மால்யங்களை அவ ருக்களித்தார். அன்றியும் ஸேவிக்கவரும் அடியார் களின் பக்திக்கேற்றவாறு பலன் கொடுக்கும்படிச் செய்தார். [ஸதா சிவ த்யா நம் செய்யும் அவர் நிஷ்டை கலையா வண்ணம் மெது வாக கைதட்டி சிவ ஸேவா பலன் தாரும் என பிரார்த் திக்க வேண்டும்.] (பால் அபிஷேகம் பரம பதம் தரும்)

## 22. திருநாவுக்கரசு (தமோபஹர்)

மத்யமண்டலத்திலே திரு ஆமூர் என்றோர் புண்ய க்ஷேத்ரமுண்டு. அங்கு ஆதித்யம் முதலிய புண்யத் தால் காரணப் பெயர் பெற்ற கீர்த்திமான் என் ெருரு நான்காம் வர்ணத்த வரிருந்தார். அவருக்கு மாதினீ எனும் மனைவியிடம் ஒரு ஆண் குழந்தை பிறந் தது. அதற்கு மருள் நீக்கி யார் — தமோபஹர் எனப் பெயரிட்டனர். அவருக்கு மூத்த ஸஹோதரி திலகவதி என்பாள். கலிப்பகையார் என்ற உத்தமனுக்கு அவளை அளித்து மணம்புரிவிக்க நிச்சயித்தார் தந்தை. அதற் குள் அந்நாட்டு அரசனை வடநாட்டரசன் எதிர்த்துப் போர்தொடுத்தான். கீர்த்தி மானும் கலிப்பகையாரும் அரசனுணையின்படிபோருக் குக் கிளம்ப நேர்ந்தது. வெற்றி ஈசன்செயலன்ருே? இருவரும் போரில் வீர மரணமடைந்தனர். மாதினி யும் உடன் கட்டை ஏறி உயிர் துறந்தாள். மணமா காவிடினும் நிச்சயம் செய்த தால் கலிப்பகையாரையே கணவனைக் கருதி அவரு டன் திலகவதியும் தீ குளிக் கக் கருதினுள். இளையவ ரான மருள்நீக்கியார் அவளை நோக்கி பெற் ருேரை இழந்த எனக்கு நீ தான் தந்தை தாய். நீயும் உயிர் விடக் கருதினுல் உனக்கு முன் நானே உயிர் விடுவேன் என்ருர். ஸஹோ தரனைக் காக்க, திலகவதி விதவா தர்மத்தைக் கைக் கொண்டு ஜீவித்திருந்தாள்.

---

அர்த்தமும் தெரிந்து கொள்ளுங்கள்.

   

# தந்தைக்கு உகந்த தனயர்.

பாரதகேஸரி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

(பங்குனி மாத தொடர்ச்சி)

அஷ்டகன் யயாதியைப் பார்த்து, எங்களை புண்ணியாத்மாக்கள் என்றீரே! எனக்கு எந்த புண்ணிய லோகம் காத்திருக்கிறது? அறியவருமா தங்களுக்கு?

*யயாதி:—* சந்தேகமென்ன சிறுவனே! உனக்கு ஸ்வர்க்க வாஸம் நிச்சயமாக ஏற்பாடாகி விட்டது. நான் அறிவேன். அங்கு நீடுழி காலம் வஸிப்பாய்.

*அஷ்:—* அப்படி எனில் ஐயா! இதோ எனக்குற்ற மேலான லோகங்களை இப்பொழுதே தங்களுக்குத் தந்தேன். தயவுடன் ஏற்று, நீர் இழந்த ஸ்வர்க்கத்தை மீண்டும் அடைவீர்.

*யயாதி:—* நான் க்ஷத்ரியன். பிறர்க்கு கொடுக்க வேண்டியவனே அன்றி, கைநீட்டி தானம் வாங்குகிறவனல்லன்.

இந்த ஸம்பாஷணையைக் கேட்டிருந்த, அஷ்டகனின் தம்பி, ப்ரதர்த்தனன் என்பான் முன்னோடி வந்து தன்னுடைய தவத்தால் அடைந்த புண்ணிய லோகங்களை யயாதிக்கு அளித்தான். அடுத்தபடி வஸுமனஸ், சிபி என்ற இரு சிறுவர்களும் அவ்வாறே செய்தனர்.

ஆனால் யயாதியோ எதையும் ஏற்க மறுத்து விட்டான். "நீங்கள் குழந்தைகள், நீங்கள் கொடுக்க நான் பெற்றுக்கொள்வது உசிதமல்ல." அத்துடன் யாசகனின் தருமமும் எனக்கில்லை.

இந்த சமயம் அவ்விடத்தை நோக்கி, மான்தோல் உடுத்த மாது சிரோன்மணி ஒருவள் வந்துற்றாள். மாதவிஎன்றுபெயர்கொண்ட அந்த உன்னததபஸ்வினி,

---

அங்கு நடைபெறும் யாகத்தையும், தன் புத்திரர்களான அஷ்டகன் முதலோரையும் கண்டு களிக்க வந்தாள். வந்தவள் அங்குற்றதோர் ஆச்சரியத்தைக் கண்டாள். தேவ புருஷனுக்கு ஸமானமான காந்தியுடன் ஒருவர் ஆகாசத்தில் நிற்பதையும் தன் பிள்ளைகள் அவருடன் பேசிக்கொண்டிருப்பதையும் கண்டு அதிசயித்தாள். கிட்ட நெருங்கிப் பார்க்கும் பொழுது ஆகாசத்தில் நிற்பவர், வேறுயாருமல்ல, தன்னுடைய பிதாவான ராஜரிஷி யயாதி சக்ரவர்த்தியே என்று கண்டு, நெஞ்சு தழுதழுக்க, கண்ணீர் வர, கை அஞ்சலியுடன் அவரை வணங்கினுள்.

பிள்ளைகள் தன் தாயின் நிலையைக் கண்டு, " இவரை முன்னமே தெரியுமா அம்மா உங்களுக்கு " என்று வினவ, மாதவியும் " குழந்தைகளே! இவர் என்னுடைய தந்தை, உங்களுடைய பாட்டனுர். பூமியில் நிகரில்லாத கீர்த்தி பெற்ற யயாதி எனும் ராஜரிஷி ஆவார். என் ஸஹோதரன் பூருவுக்கு ராஜ்யத்தையும் அளித்து விட்டு, இவர் ஸ்வர்க்கம் சென்று பலகாலம் ஆகியதே. இங்கு எப்படி வந்துற்றுர்? ஏன் ஆகாச வீதியிலே நிற்கிறுர்"?

*வஸுமனஸ்:–* தாயே, ஸ்வர்க்கத்திலிருந்து, புண்ணியம் குறைந்து தவறி விழுந்துக் கொண்டிருக்கிறுர். இவரை விழாமல் மறுபடியும் ஸ்வர்க்கம் செல்ல எங்கள் புண்ய பலனை அர்ப்பணம் செய்தோம். ஏற்க மறுத்து விட்டார்.

மாதவி தன் தந்தையின் நிலையைக் கண்டு மிகுந்த துக்கம் அடைந்தாள். தந்தையை நோக்கி " தந்தையே தங்கள் புதல்வி மாதவி. கௌசிகரின் பத்னி. இவர்கள் என்னுடைய புதல்வர்கள். தங்களுடைய தௌஹித்திரர்கள். என்னுடையதும், என் புத்ரர்களுடையதுமான, தவப் பயனை எல்லாம் தங்களுக்கு அளிக்கிறேும்.

---

தாங்கள் மறுக்கலாகாது. ஏற்பதால் குற்றமும் வராது. ஏனெனில்,

**तपसा निर्जितान्लोकान् प्रतिगृण्हीष्व मामकान् ।**
**पुत्राणामपि पौत्राणां धर्माद्धिगतं धनं ॥**

ஒருவனுக்கு தன் ஸத்புத்ரர்களுடைய தனம், தன்னுடைய தனத்திற்கு ஸமானம். அதேபோல அவர்களுடைய புத்ரர்களுடையதும் இவனுக்கு உரியது ஆகும். புத்திரர்கள் என்ற சொல்லில், புத்ரிகளும் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். ஆதலால் என்னுடையதும், என் பிள்ளைகளுடையதுமான இந்த சொத்து தங்களுக்கே உரியதல்லவா. இதில் தானம் கொடுத்துப் பெற வேண்டிய நியதி ஏது? தடையின்றி இவைகளை உபயோகித்துக் கொண்டு, உசிதம்போல் நீங்கள் இழந்துபோன ஸ்வர்கத்தை அடைய வேண்டுகிறேன்.

யயாதி தன்புதல்வியின் இனிய சொல்லைக்கேட்டு ஆமோதித்தான். அளவில்லாத மகிழ்ச்சி கொண்டான். இன்று என் பெண் எனக்கு வழிகாட்டினாள் என்று நினைத்து பூரித்தான். எனக்குப் பிறந்த பிள்ளைகளில் பூரு என்பவன் கடைசீப்பிள்ளை. எனினும் சுக்ராசாரியாருடைய வீணான சாபத்திற்கு பலியாகி யௌவனத்தை இழந்த எனக்குத் தன் யௌவநத்தைக் கொடுத்து என் முதுமையை ஏற்றுக் கொண்டவன் அவன் ஒருவன். மற்ற பிள்ளைகள் இகழ்ந்து ஒதுங்கினர். அதனால் யௌவனத்தில் விடப்பட்டஎனது தருமங்களைச்செய்துமுடிக்க அந்த சிறுவனின் தியாகம் எனக்கு உதவியது. பிறகு என் மூப்பைத் திரும்பப் பெற்றுக் கொண்டேன். பூருவுக்கு யௌவனத்தைத் திருப்பி அளித்ததுடன், அவனுக்கு பூர்ண அரசுரிமையையும் அளித்தேன். இதை ஆக்ஷேபித்தனர் பெரியோர். மூத்தவன் யது இருக்க இளையவனுக்கு எவ்வாறு பட்டம் என்றனர். அப்

---

யில் திவ்ய விமானங்கள் தெரிந்தன. அஷ்டகன் முத லோரும், தாங்கள் செய்துவருகிற யாகத்தை முடித்துக் கொண்டு, யயாதியுடன் விமானமேறி அளவளாவிக் கொண்டு ஸ்வர்க்கம் சென்றனர்.

இம்மையிலும் மறுமையிலும் பிள்ளைகளால் பெரு மையடைந்தான் யயாதி. ஸத்புத்ரர்களான பாண்டவர் களால் பெருமை பெற்றான் பாண்டு மஹாராஜன். துஷ்ட புத்ரர்களால் மீளாத துயரடைந்தான் திருதராஷ் டிரன். இவ்விருவருக்குள் அரசுரிமைக்கு ஏற்பட்டப் போட்டியே மஹாபாரத சரிதமாக அமையப்போகிறது. இது சமயம் யயாதி காலத்தில், அரசுரிமை விஷயமாக ஏற்பட்ட மெய்யுரையை நமக்குத் தெரிவிக்கிறார் கவி. இந்த சிறந்த உபாக்யானத்தின் மூலமாக ஸ்ரீ வால்மீகி பகவான் தமது ஆதி காவ்யமான ஸ்ரீமத் ராமாயணத் தில் ஆரண்ய காண்டத்தில் அகஸ்த்யர் ஸ்ரீ ராகவனை பார்த்துக் கொண்டாடும் வாயிலாக யயாதியின் சரிதத் தைக் குறிப்பிட்டிருக்கிறார்.

धन्यस्ते जनको राम सराजा रघुनन्दन ।
यस्त्वया ज्येष्ठपुत्रेण ययातिरिव तारितः ॥

ரகுகுலத்தைச் சிறப்பிக்கச் செய்த ஸ்ரீராம! உன் தந்தை தசரதர் மிகுந்த பாக்யசாலி. மூத்தபிள்ளையான உன்னால் (உன் ஸத்யானுஷ்டானத்தால்) அவர் யயாதி போல் பாதுகாக்கப் பட்டார் அன்றோ!

---

# ஆயுஷ்காமீயம்.



" ஸ்வஸ்தி ஸ்ரீ "

**கடு திரவிய வர்க்கம்:** மிளகு, மிளகாய், காயம் முதலியன. பசி அதிகரிக்கும். உணவு ஜீர்ணமாகும். ஸ்ரோதஸ்ஸுகள் விரிந்துதாதுக்கள் உடலில் சரியாகப் பரவும், உஷ்ணவீர்யம்-கபஹரம்.

**கஷாய திரவிய வர்க்கம்:** தேன் (அநுரஸம்)-அத்திக்காய்-மாங்கொட்டை, வாழைப்பூ - விளாங்காய் - பேரிச்சு முதலியன. குருகுணம் இரத்தத்தைச் சுத்தமடையச் செய்யும். சர்மத்தைப் பதன் படுத்தும். சீத வீர்யம் பித்த கபஹரம்.

பகவத் கீதை பதினேழாம் அத்யாயத்தில் மூன்று குணமுடையவர்களுக்கு பிரியமான, அதாவது அவர்களுக்கேற்ற குணங்களை உடைய ஆகாரங்களைப் பற்றி சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**आयुः सत्वबलारोग्य सुखप्रीतिविवर्धनाः ।**
**रस्याः स्निग्धाः स्थिरा हृद्या आहाराः सात्विक प्रियाः ॥** ஸ்-8

**कट्वम्ललवणात्युष्ण तीक्ष्ण रूक्षविदाहिनः ।**
**आहारा राजसस्येष्टा दुःख शोकामयप्रदाः ॥** ஸ்லோகம்-9

**यातयामं गतरसं पूति पर्युषितं च यत् ।**
**उच्छिष्ट मपिचामेध्यं भोजनं तामसप्रियम् ॥** ஸ்லோகம்-10

ஆயுஸ், ஞானம் (ஸத்வம்), பலம், ஆரோக்கியம், ஸுகம், பிரீதி இவைகளை விருத்திசெய்கின்றவையும் ரஸமுள்ளவையும், ஸ்நிக்தமானவையும், சரீரத்தில் அதிகநேரம் நிலையாய் இருப்பதாகிய ஸரமுள்ளவையும் (ஸ்திரம்), மனோஹரமானவையுமாய் உள்ள ஆகாரங்கள் **ஸாத்வீகனுக்குப்** பிரியமானவைகள்.

அதிகமான கசப்பு, புளிப்பு, உப்பு, சூடு, உறைப்பு (தீக்ஷ்ணம்), வறட்சி, தாபம் இவைகளை உண்டுபண்ணுகிறவைகளும் (சரீரத்தில்) துன்பத்தையும் (மனதில்) சோகத்தையும் கொடுப்பவைகளுமான ஆகாரங்கள் **ராஜஸனுக்குப்** பிரியமானவை.

பாதிபக்குவமானதும், ஸார மற்றதும், துர்வாஸனையுள்ளதும், பழயதாகியதும், (சமைத்து ஓரிரவு ஆனது)

சாப்பிட்ட மிச்சமும் ஆன ஆகாரங்கள் **தாமஸனுக்குப்** பிரியமானவைகள்.

அதாவது—எந்த வஸ்துக்களால், தேகதாதுக்கள் சுத்தம், ஆரோக்கியம், மிதபலம் அடையுமோ மனம், புத்தி, இந்த்ரியம், இவை விகாரமின்றித் தெளிவு, சாந்தம், தயை, பக்தி, திருப்தி, ஆனந்தம் முதலியவைகளை உடையதாய் சதா நற்செய்கைகளைப் புரிந்து ஸுகமடையுமோ அவை **ஸத்வகுணமானவை**. எந்த வஸ்துக்களால் தேக தாதுக்கள், மதோன்மத்தம் அதிபலம் இவைகளை அடையுமோ மனம், புத்தி, இவை சஞ்சலம், கோபம், அகங்காரம், அதிகாமம், ஆசை துணிவு முதலியவைகளால், அதிக கெடுதியும் துணிவுமானக் காரியங்களைச் செய்து சுகமின்றி இருக்குமோ அவை **ராஜஸ குணமானவை**. எந்த வஸ்துக்களால், தாதுக்கள், ரஜோகுணத்தில் கூறிய மாதிரி ஆவதுடன்—மனம், புத்தி இவைகள் அறிவின்மை, மந்தம், பிரமாதம், வஞ்சகம், துயில் முதலியவைகளையும் அடையுமோ, அவை **தாமஸ குணமானவை**.

எல்லா ஆகார வஸ்துக்களும் மூன்று குணங்களையும் உடையதாக இருந்தாலும் ஏதாவதொன்றையே மேலாகக்கொண்டிருக்கும். இவற்றின் உதாரணங்கள் கீழேத் தரப்பட்டுள்ளன.

**ஸத்வகுணம் மேலாகக்கொண்டவை:** அரிசி (பச்சை) கோதுமை, உளுந்து, பயறு ( பெரியது, பச்சையானது ) எள்ளு, வெல்லம், சர்க்கரை, கல்கண்டு, தேன், பசுவின் பால், தயிர், வெண்ணெய், நெய், நல்லெண்ணை, தேங்கா எண்ணை, வள்ளிக்கிழங்கு, சேப்பங்கிழங்கு, கொத்தவரங்காய், பாகக்காய், வாழைக்காய், பலாக்காய், மாங்காய், நெல்லிக்காய், இஞ்சி, சுக்கு, மிளகு, சீரகம், மணத்தக்காளிக்காய், சுண்டைக்காய், நாரத்தங்காய், தேங்காய், வாழைத்தண்டு, கீரைத்தண்டு, விளாம்பழம், இலந்தம்பழம், கருவேப்பிலை, கொத்தமல்லி, அகத்திக்கீரை, மணத்தக்காளிக் கீரை, முளைக்கீரை, பரண்டை, வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம், நாவற்பழம், கிச்சிலிப்பழம், கொய்யாப்பழம், இளநீர், குங்குமபூ, பச்சை கர்ப்பூரம் ஜாதிபத்திரி, ஜாதிக்காய், ஏலக்காய், வாதுமைப்பருப்பு, பேரீச்சம், வேப்பம் பூ முதலியன.

---

ரஜோகுணத்தை மேலாகக் கொண்டவை; சாமை, சவ்வரசி, துவரை, முந்திரிப்பருப்பு, நிலக்கடலை, மஞ்சள், பெருங்காயம், சோம்பு, புளி, மிளகாய், உப்பு, கடுகு, தனியா, இலவங்கம், இலவங்கப்பட்டை, ஓமம், கசகசா, வெற்றிலை, பாக்கு, வெள்ளாட்டுப்பால், தயிர், வெண்ணெய், நெய், புடலங்காய், வெண்டைக்காய், பூசனிக்காய், அத்திக்காய், எலுமிச்சம்பழம், கருணைக்கிழங்கு, மாவளிக்கிழங்கு, புதினா, வாழைப்பூ, மாதளம்பழம், அன்ஞசிபழம், புளியங்காய், கடலை, கடுகெண்ணெ, ஆவாரம்பூ சீமை அத்திப்பழம், புளியங்கொழுந்து, அப்பளாகாரம், (சோடா மாவு) முதலியன.

தமோகுணத்தை மேலாகக் கொண்டவை: புழுங்கலரிசி, கேழ்வரகு, வரகு, கம்பு, சோளம், பட்டாணி, மொச்சைக் கொட்டை, கத்திரிக்காய், அவரைக்காய், பீர்க்கங்காய், முருங்கைக் காய், சுரைக்காய், உருளைக் கிழங்கு, ஆள் வள்ளிக்கிழங்கு, முள்ளங்கி, வெங்காயம், வெள்ளைப் பூண்டு, சிறுகீரை, அரைக்கீரை, புளியாரை, பசரைக் கீரை, கொட்டைமுந்திரிப்பழம், நுங்கு, பனம் பழம், சீதாப்பழம், ஆமணக்கெண்ணெ, கள்ளு, காசினிக் கீரை, கலவங்கிரை, எருமைப்பால், தயிர், வெண்ணெ, நெய், தட்டைப்பயறு, சிறுபயறு, பனை (ஈச்சம்தென்னை) வெல்லம், பனங்கற்கண்டு முதலியன.

மேற்கூறப்பட்ட வஸ்துக்கள் ஏறக்குறைய எல்லாம் தாது, தாவர வர்க்கங்களைச் சேர்ந்தவை. பால் தயிர் வெண்ணெ, நெய், இவைகள் மட்டும் ஜீவவர்க்கத்தினின்று வருகின்றன. முட்டை, மீன் வர்க்கம், பறவைகள், மாம் ஸங்கள் (விலங்குகள்) இவைகளை எடுத்துக் கொள்ள வில்லை. உலகத்தில் பெரும்பான்மையோர் இவற்றை விரும்பி உண்ணுகிறார்கள். இவற்றுள் முக்குண பேத மிருப்பினும் மொத்தத்தில் இவை ரஜோகுணத்தையும் தமோகுணத்தையுந்தான் விருத்திபடுத்துகின்றன. இரஜஸூம், தமஸூம் மஹே வியாதிகளை உண்டுபண்ணி தேகத்தை அழிக்குமாதலால் ஸத்வகுண ஸம்பன்னராய் சாந்த நிலையை அடைய ஆவல் கொண்ட யாவரும் இத்தகைய ஆகார வித்துகளை அறவே விலக்குவது அவசியம். மேலும் ஆகாராதிகளே நமது தேகத்தினுட்சென்று தாதுக்களாக பரிணமித்து, வேலை செய்ய சக்தியைத் தருகின்றன.

---

**அந்தந்த இடத்திலும் ஷ வகுப்பு வேண்டும்.**

பக்திப் பகுதி.

# ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்.

14. श्रीस्वामि पुष्करिणिकाऽऽप्लवनिर्मलाङ्गाः
श्रेयोऽर्थिनो हरविरिञ्च सनन्दनाद्याः ।
द्वारे वसन्ति वरवेत्रहतोत्तमाङ्गाः
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணிகாऽऽப்லவ நிர்மலாங்கா:
ஸ்ரேயோऽர்திநோ ஹரவிரிஞ்ச ஸநந்தநாத்யா: ।
த்வாரேவஸந்தி வரவேத்ர ஹதோத்த மாங்கா:
ஸ்ரீவேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ॥

श्रीवेङ्कटाचलपते ஸ்ரீவேங்கடாசலபதே-திருப்பதிநாதனே हरविरिञ्च सनन्दनाद्याः ஹரவிரிஞ்ச ஸநந்தநாத்யா: - அரன் அயன் ஸநந்தனர் முதலியோர் श्रेयोऽर्थिनः ஸ்ரேயோர்திந: மேன்மையை விரும்பினவராய் श्रीस्वामिपुष्करिणिका ஸ்ரீ ஸ்வாமி புஷ்கரிணிகா-சிறந்த ஸ்வாமி புஷ்கரிணியில் आप्लवनिर्मलाङ्गाः ஆப்லவநிர்மலாங்கா:-நீராடி அழுக்கு நீங்கிய அவயவங்கள் உடையவர்களாய் द्वारे த்வாரே-வாயிலில் वरवेत्रहतोत्तमाङ्गाः வரவேத்ர ஹதோத்தமாங்கா;-உயர்ந்த பிரம்புகளால் அடிக்கப்பட்ட தலைகள் உடையவர்களாய் वसन्ति வஸந்தி-நிற்கின்றனர் तवसुप्रभातम् தவஸுப்ரபாதம்-உனக்கு நற்பொழுது புலருக.

15. श्री शेषशैल गरुडाचल वेङ्कटाद्रि
नारायणाद्रि वृषभाद्रि वृषाद्रिमुख्याम् ।
आख्याम् त्वदीयवसते रनिशं वदन्ति
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

ஸ்ரீ ஶேஷஶைல கருடாசல வேங்கடாத்ரி
நாராயணாத்ரி வ்ருஷபாத்ரி வ்ருஷாத்ரி முக்யாம் ।
ஆக்யாம் த்வதீய வஸதேரநிஶம் வதந்தி
ஸ்ரீவேங்கடாசல்பதே தவஸுப்ரபாதம் ॥

---

பெண்களுக்கு ஸ்தோத்ரம் கற்பிக்கவும்.

பொழுது உலகமறிய, பிற்கால சந்ததிகளும் கடை பிடிக்க ஒருசாஸனம் செய்தேன்.

**आत्मनस्सदृशः पुत्रः पितृ दैवर्षि पूजने ।**
**यो बहूनां गुणकरः स पुत्रो ज्येष्ठ उच्यते ॥**

மூத்தவர்கள் யது, த்ருஹ்யு முதலானோர் என்சொல் கேட்கவில்லை. என் துயரத்தைக் கருதவும் இல்லை. பித்ருக்கள், தேவர்கள், ரிஷிகள் இவர்களைப் பூஜிப்பதிலும், என்னிடத்திலும் மிகுந்த பக்தியும் சிரத்தையும் இந்த பூருவிடமே காணப்படுகிறது. இவனிடம் எல்லோர்க்கும் நன்மை செய்யும் இயற்கையான சுபாவம் விளங்குகிறது. ஆதலால் இவன் கடைக்குட்டியாகப் பிறந்தாலும் அரசுரிமைக்கு ஜேஷ்டனே.

**योव नुवर्ती पुत्राणां स पुत्रो दायभाग्भवेत् ॥**

இப்படி ஒருபிள்ளை அன்று என்னைக் காப்பாற்றினான். இன்றோ, இதோ என் பெண் வம்சம் என்னைக் கை தூக்கிவிட முன்னிட்டு நிற்கிறது. இன்று முதல் பெண்ணின் வம்சத்தில் வந்த தௌஹித்ரர்கள் செய்யும் புண்ணிய கர்மாக்களால் பித்ருக்கள் திருப்தி அடையட்டும்.

**दुहित्रा चैव दौहित्रैः तारितोहं महात्मभिः ।**
**तस्मात्पवित्रं दौहित्रं अद्यप्रभृति पैतृके ॥**

குதபகாலம் (பகல் 1 மணிமுதல் 2 மணிவரை), எள், தர்ப்பம், வேதசம்பன்னர்களான பிரும்மணர்கள் சுத்தமான அன்னம் எப்படி பித்ரு காரியங்களில் முக்யத்வம் அடைகின்றனவோ, அவ்வாறே தௌஹித்ரனும் புத்ர பௌத்ரர்களைப் போல் பித்ருக்களை மகிழ்விக்கக் கடவன்.

பிறகு யயாதி அன்புமிகுந்த தன் பேரன்களை தன்னுடன் ஸ்வர்கத்திற்கு வர அழைத்தான். ஆகாச வீதி

---

**श्री वेङ्कटाचलपते** ஸ்ரீ வேங்கடாசலபதே - திருப்பதி நாதனே **श्री शेषशैल गरुडाचल वेङ्कटाद्रि नारायणाद्रि वृषभाद्रि वृषाद्रिमुख्याम्** ஸ்ரீ ஶேஷஶைல கருடாசல வேங்கடாத்ரி நாராயணாத்ரி வ்ருஷபாத்ரி வ்ருஷாத்ரிமுக்யாம் - பெருமை வாய்ந்த சேஷமலை, கருடமலை, வேங்கடமலை, நாராயண மலை, வ்ருஷபமலை, வ்ருஷமலை முதலிய **त्वदीयवसतेः आख्यां** த்வதீயவஸதே: ஆக்யாம் - உன் உறைவிடத்தின் பெயர் களை **अनिशम्** அநிஶம் - எப்பொழுதும் **वदन्ति** வதந்தி - சொல்கின்றனர். **तव सुप्रभातम्** தவஸுப்ரபாதம் (முன் போலவே பொருள்).

16. **सेवापराः शिवसुरेश कृशानुधर्म**
**रक्षोम्बुनाथ पवमानधनाधिनाथाः ।**
**बद्धाञ्जलि प्रविलसन्निज शीर्षदेशाः**
**श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥**

ஸேவாபரா: ஶிவஸுரேஶ க்ருஶானுதர்ம
ரக்ஷோம்புநாத பவமான தநாதிநாதா: ।
பத்தாஞ்ஜலி ப்ரவிலஸந்நிஜ ஶீர்ஷதேஶா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ॥

**शिवसुरेश कृशानुधर्म रक्षोऽम्बुनाथ पवमान धनाधिनाथाः** ஶிவஸுரேஶ க்ருஶாநுதர்ம ரக்ஷ: அம்புநாத பவமான தநாதிநாதா: - அரன், தேவத்தலைவன், அக்நி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன் என்பவர்கள் **बद्धाञ्जलि प्रविलसन्निज शीर्षदेशाः** பத்தாஞ்ஜலி ப்ரவிலஸந்நிஜ ஶீர்ஷதேஶா: - கூப்பிய கரங்களால் ப்ரகாசிக்கின்ற தலைப் பகுதியை உடையவர்களாய்க்கொண்டு **सेवापराः** ஸேவா பரா: - தொண்டு விரும்பியவராய் **सन्ति** ஸந்தி - இருக் கின்றனர். **श्रीवेङ्कटाचलपते** ஸ்ரீ வேங்கடாசலபதே-திருமலை நாதனே **तव सुप्रभातम्** தவஸுப்ரபாதம் (முன்போலவே பொருள்.)

---

**ஆடம்பரமான ஆடைகளை அணிய வேண்டாம்.**

17. घाटीषु ते विहगराज मृगाधिराज
नागाधिराज गजराज हयाधिराजाः ।
स्वस्वाधिकार महिमाधिक मर्थयन्ते
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

*தாடீஷு தே விஹகராஜ ம்ருகாதிராஜ*
*நாகாதிராஜ கஜராஜ ஹயாதிராஜா: ।*
*ஸ்வஸ்வாதிகார மஹிமாதிக மர்தயந்தே*
*ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ர பாதம் ॥*

**श्री वेङ्कटाचलपते** *ஸ்ரீ வேங்கடாசலபதே* - திருமலை நாதனே **विहगराज मृगाधिराज नागाधिराज गजराज हयाधिराजाः** *விஹகராஜ ம்ருகாதிராஜ நாகாதிராஜ கஜராஜ ஹயாதிராஜா:*-பக்ஷிகளுக்கெல்லாம் அரசனாயிருக்கும் கருடன், ஸிம்மம், ஆதிசேஷன், ஐராவதம், உச்சைஸ்ரவஸ் என்ற இவைகள் **ते** தே-உன்னுடைய **घाटीषु** *தாடீஷு*-நடைகளில் **स्वस्वाधिकार महिमाधिकम्** *ஸ்வஸ்வாதிகார மஹிமாதிகம்* - தம்தம் தகுதிக்கேற்ற பெருமையினும் அதிக பாகத்தை **अर्थयन्ते** *அர்த்தயந்தே* - யாசிக்கின்றனர். **तव सुप्रभातम्** *தவஸுப்ரபாதம்* (முன்போலவே பொருள்.)

18. सूर्येन्दुभौम बुधवाक्पतिकाव्यसौरि
स्वर्भानुकेतु दिविषत्परिषत्प्रधानाः ।
त्वद्दासदास चरमावधिदासदासाः
श्री वेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

*ஸூர்யேந்து பௌம புதவாக்பதிகாவ்ய ஸௌரி*
*ஸ்வர்பானுகேது திவிஷத் பரிஷத்ப்ரதானா:*
*த்வத்தாஸதாஸ சரமாவதி தாஸதாஸா:*
*ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ॥*

**सूर्येन्दु भौम बुधवाक्पति काव्यसौरि स्वर्भानु केतु दिविषत्परिषत्प्रधानाः** *ஸூர்யேந்துபௌம புதவாக்பதி காவ்ய ஸௌரி ஸ்வர்பானு கேது திவிஷத்பரிஷத் ப்ரதானா:* - கதிரவன்,

---

**ஸினிமா முதலியவைகளுக்கு போகவேண்டாம்.**

சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது, வானவர் ஸபையிலுள்ள முக்யர்கள் **त्वद्दास-दासचरमावधिदासदासाः** த்வத்தாஸதாஸ சரமாவதி தாஸதாஸா:-உன்னுடைய அடியார்களின் அடியார்களுக்குக் கடை எல்லையையடைந்துள்ள அடியார்களுக்கும் **दासाः** தாஸா: அடியார்களாய் **सन्ति** ஸந்தி - இருக்கின்றனர். **श्री वेङ्कटाचलपते तव सुप्रभातम्** ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் - (முன்போலவே பொருள்)

19. **त्वत्पादधूलि भरितस्फुरितोत्तमाङ्गाः**
**स्वर्गापवर्ग निरपेक्षनिजान्तरङ्गाः ।**
**कल्पागमाकलनयाऽऽकुलतां लभन्ते**
**श्री वेंकटाचलपते तव सुप्रभातम् ॥**

த்வத்பாததூளி பரிதஸ்புரிதோத்தமாங்கா:
ஸ்வர்காபவர்க நிரபேக்ஷ நிஜாந்தரங்கா: ।
கல்பாகமாகலநயாऽऽகுலதாம் லபந்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ॥

**त्वत्पादधूलि भरितस्फुरितोत्तमाङ्गाः** த்வத்பாததூளி பரிதஸ்புரிதோத்தமாங்கா:-உன்னுடைய பாததூளியைச்சுமப்பதால் நிறைந்து விளங்குகின்ற தலைகளை உடையவர்களாகவும் **स्वर्गापवर्ग निरपेक्ष निजान्तरङ्गाः** ஸ்வர்க்காபவர்க நிரபேக்ஷ நிஜாந்தரங்கா: - சுவர்க்க மோக்ஷத்திலும் விருப்பமில்லாத தங்கள் மனமுடையவர்களாகவும் **कल्पागमा-कलनया** கல்பாகமாகலநயா – கல்பங்கள் வந்துவிடப்போகின்றனவேஎன்ற எண்ணத்தால் **आकुलतां** ஆகுலதாம்-மனக் கலக்கத்தை **लभन्ते** லபந்தே – அடைகின்றனர் **श्री वेंकटाचलपते तव सुप्रभातम्** ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் - (முன்போலவே பொருள்.)

20. **त्वद्गोपुराग्र शिखराणि निरीक्षमाणाः**
**स्वर्गापवर्गपदवीं परमां श्रयन्तः ।**

---

*விவாஹமானவர் கச்சமணியவேண்டும்.*

मर्त्या मनुष्य भुवने मतिमाश्रयन्ते
श्री वेंकटाचलपते तव सुप्रभातम् ॥

த்வத்கோபுராக்ர ஶிகராணி நிரீக்ஷமாணா:
ஸ்வர்காபவர்க்க பதவீம் பரமாம் ஶ்ரயந்த: ।
மர்த்யா மனுஷ்ய புவனே மதிமாஶ்ரயந்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ॥

**परमां** பரமாம் - சிறந்ததான **स्वर्गापवर्ग पदवीं** ஸ்வர்காபவர்க்க பதவீம் - சுவர்க்க மோக்ஷங்களின் வழியை **श्रयन्तः** ஶ்ரயந்த: - அடைந்துள்ள **मर्त्याः** மர்த்யா: - மானிடர்கள் **त्वद्गोपुराग्रशिखराणि** த்வத்கோபுராக்ர ஶிகராணி- உன்னுடைய கோபுரத்தின் சிகரங்களை **निरीक्षमाणाः** நிரீக்ஷமாணா: – பார்த்தவர்களாய் **मनुष्यभुवने** மனுஷ்ய புவனே - மனுஷ்ய லோகத்தில் **मतिं** மதிம் - எண்ணத்தை (புத்தியை) **आश्रयन्ते** ஆஶ்ரயந்தே – வைக்கின்றனர். **श्री वेंकटाचलपते तव सुप्रभातम्** ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் - (முன்போலவே பொருள்.)

21. श्री भूमिनायक दयादि गुणामृताब्धे
देवादिदेव जगदेकशरण्यमूर्ते ।
श्रीमन्ननन्त गरुडादिभिरर्चिताङ्घ्रे
श्री वेंकटाचलपते तव सुप्रभातम् ॥

ஸ்ரீ பூமிநாயக தயாதி குணாம்ருதாப்தே
தேவாதிதேவ ஜகதேக ஶரண்யமூர்த்தே ।
ஸ்ரீமந் அனந்த கருடாதி பிரர்ச்சிதாங்க்ரே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ॥

**श्री भूमिनायक** ஸ்ரீ பூமிநாயக - லக்ஷ்மிக்கும் பூமிக்கும் நாயகனே (கணவனே) **दयादिगुणामृताब्धे** தயாதி குணாம்ருதாப்தே - தயை முதலிய குணங்களுக்கு அம்ருதக்கடலே!

---

**देवादिदेव** தேவாதி தேவ - தேவதேவனே **जगदेकशरण्यमूर्ते** ஜகதேக ஶரண்யமூர்த்தே - ஜகமெல்லாம் ஒரே புகலான திருவுருவத்தை உடையோனே **श्रीमन्** ஸ்ரீமன் - ஸ்ரீமானே **अनन्तगरुडादिभिः** அனந்தகருடாதிபி: - அனந்தன், கருடன் முதலியவர்களால் **आर्चिताङ्घ्रे** அர்ச்சிதாங்க்ரே - பூஜிக்கப் பட்ட பாதாரவிந்தம் உடையவரே **श्री वेंकटाचलपते तव सुप्रभातम्** ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் - (முன் போலவே பொருள்.)

22. **श्री पद्मनाभ पुरुषोत्तम वासुदेव**
**वैकुण्ठ माधव जनार्दन चक्रपाणे ।**
**श्रीवत्सचिह्न शरणागत पारिजात**
**श्री वेंकटाचलपते तव सुप्रभातम् ॥**

ஸ்ரீ பத்மநாப புருஷோத்தம வாஸுதேவ
வைகுண்ட மாதவ ஜனார்தன சக்ரபாணே ।
ஸ்ரீவத்ஸசிஹ்ந ஶரணாகத பாரிஜாத
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ॥

**श्री पद्मनाभ** ஸ்ரீ பத்மநாப -தாமரை போன்ற நாபியை உடையோனே **पुरुषोत्तम** புருஷோத்தம - புருஷ ஶ்ரேஷ்டனே **वासुदेव** வாஸுதேவ - வஸுதேவ புதல்வனே **वैकुण्ठ** வைகுண்ட - வைகுண்டனே **माधव** மாதவ - லக்ஷ்மீநாதனே **जनार्दन** ஜனார்தன - ஜனங்களின் தொல்லையை அகற்றுபவனே **श्रीवत्सचिह्न** ஸ்ரீவத்ஸசிஹ்ந - ஸ்ரீவத்ஸ எனும் மறுவை அடையாள முடையவனே **शरणागत पारिजात** ஶரணாகத பாரிஜாத - சரணமடைந்தவர்க்குப் பாரிஜாதம் போன்றவனே **श्री वेंकटाचलपते तव सुप्रभातम्** ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் -(முன்போலவே பொருள்.)

---



# ஸ்ரீ ராமாவதாரம்.

தியாகோப நிஷத்.

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்

[ ஸ்ரீராமபிரானுடைய அவதார தினத்தை நாடெங்கும் இந்த வாரம் கொண்டாடுகிறது. 'ராம்' எனும் திவ்ய நாமம் எல்லோருடைய செவியிலும், மனத்திலும் நிலை பெற்று வருகிறது. அந்தப் பரமனின் திரு அவதாரத்தையும், திவ்ய சரிதமாகிய ஸ்ரீமத் ராமாயண காவியத்தையும் படித்தும் கேட்டும் பேரின்பம் அடைகிறோம். ஸ்ரீ ராம பிரானின் அவதார தத்துவத்தை சுருக்கமாக, நம் மனதில் பதிய வைக்கும்படி கீழ்க்கண்ட கீர்த்தனம் அமைந்துளது.]

ராகம்—ஹரிகாம்போதி] [தாளம்—ரூபகம்

பல்லவி.

உண்டேதி ராமுடொகடு
ஊரக செடி போகு மனஸா — (உ)

அனுபல்லவி.

மண்ட மார்த்தாண்ட மத்ய
மண்டலமுன செலங்கு சுனு — (உ)

சரணம்.

தாமஸாதி குண ரஹிதுடு
தர்மாத்முடு ஸத்ய ஸந்துடு
க்ஷேமகருடு தியாகராஜ
சித்த ஹிதுடு ஜகமுனுண்டி — (உ)

பொருள்:—

*பல்லவி:* ராமன் என்ற பெயர்கொண்ட ஒருவன் இருக்கையில் வீணுக அலைந்திருக்கவேண்டாம் மனமே.

*அனுபல்லவி:* பிரகாசமான ஸூர்ய மண்டலத்தின் மத்தியில் விளங்கும் சைதன்ய ஸ்வரூபியான பர பிரும்மமே ஸ்ரீ ராமன். (பிரசித்தமான ஸூர்ய வம்சத்தின் மத்தியில், அந்த வம்சத்தை விளங்கச்செய்பவன் எங்கள் ஸ்ரீராமன்.)

*சரணம்:* தாமஸ குணங்கள் அற்ற சுத்த ஸத்வ குண ஸம்பன். தர்மமும், ஸத்யமுமே அவனுடைய

---

*கிராம, ஆலய, குளங்களை சீர் திருத்துங்கள்.*

ஆத்மா. உலகில் யாவர்க்கும் சுகவாழ்வு அளிப்பவன். தன்னை என்றென்றும் நினைப்பவர்களுக்கு (ஸ்ரீ தியாகராஜர் போன்றவர்களுக்கு) எப்பொழுதும் ஹிதமே செய்பவன்.

கருத்து: இந்த எளிய கீர்த்தனத்தின் சரணத்தில், அவதார புருஷனை ஸ்ரீ ராமனையும், ஸர்வ சைதன்ய ஸ்வரூபியான ப்ரும்மத்தையும் சேர்த்துக் காட்டியிருக்கிறார். தருமமும் ஸத்யமும் முடிவில் ஆனந்தத்தில் நிலைபெறும். அவ்வானந்தமே பிரும்மத்தின் இயல்பு. அந்த ப்ரும்மமே, தேஜோ மண்டலத்தின் சைதன்யமாக விளங்குகிறது. அந்த சைதன்ய சக்தியே, உலகத்தின் க்ஷேமாபிவிருத்திக்கு அவசியமாகும்.

நிதமும் ஸந்த்யோபாஸனை செய்யும் தியாகராஜ ஸ்வாமிகளுக்கு, அந்த ஸந்த்யோபாஸனையிலும், ஸ்ரீ தாரக ப்ரும்மமான தன் இஷ்ட தெய்வத்தைக் கண்டு ஆனந்திக்கிறார்.

## தார்மிகச் செய்திகள்.

**ஸ்ரீ ராம நவமி உத்ஸவம்:** டில்லி, கல்கத்தா, தஞ்சை, வேலூர், பழைய மாம்பலம் முதலிய இடங்களிலிருந்து ஷை உத்ஸவம் நடப்பதாக பத்ரிகைகள் வந்தன. நமது ஆசிரியர் பலவிடங்களில் பங்கெடுத்துக்கொண்டார். சென்னை ஸ்ரீ பூர்ணாநந்தநாத வித்யா பீடத்தில் வாஸந்த நவராத்ரி சிறப்பாக நடந்தது.

**அகிலபாரத சங்கர ஸேவா ஸமாஜம்:** 4-4-60ல் ஸ்ரீ C. P. ராமஸ்வாமி அய்யர் தலைமையில் சென்னை T. நகர் சிவ விஷ்ணு ஆலயத்தில் 3 நாள் மகாஸம்மேளனம் நடத்திற்று. பற்பல பண்டிதர்கள் ஸ்ரீ சங்கர வேதாந்தம் தர்மம் பக்தி கர்ம முதலியனபற்றி பேசினார்கள். பண்டித ஸன்மானம் நடந்தது. நிரந்தரமாக மாஜி ஜட்ஜ் ஸ்ரீ K. சங்கரநாராயணய்யர் பங்களா ரோட் T. நகரில் ஷை ஸமாஜம் அமைக்கப்பட்டுளது.

## சார்வரி வருஷத்திய அதிபதிகள்.

ராஜா - சந்திரன், மந்திரி - புதன், ஸேனாதிபதி-செவ்வாய், சஸ்யாதிபதி-சனி, தான்யாதிபதி - குரு, அர்காதிபதி - செவ்வாய், மேகாதிபதி - செவ்வாய், ரஸாதிபதி - சந்திரன், நீரஸாதிபதி - சுக்கிரன். பொதுவாக இவ்வாண்டு ஸுபிக்ஷமாக இருக்கும்.

**கோவின் ஸம்ரக்ஷணம் மிக முக்ய தர்மம்.**



# நவரஸம்.



" அக்ஷயபரணி "

## சுமை கூலி !

"இன்று பத்திரிகையில் ஒரு விஷயம் பார்த்தீர்களா? மாசி மக உற்சவத்திற்கு இந்த வருஷம் நம் ஊரில் ஸ்வாமி புறப்பாடே இல்லையாமே! கூலி தகராறினல் சுமப்பவர்கள் மறுத்துவிடவே ஏராளமான பக்தர்கள் ஏமாற்ற மடைந்து திரும்பினர்களாமே!"

"பக்தர்கள் ஏமாறுவானேன்? கூலிக்காகக் கூடியவர்கள் மறுத்துவிட்டால் பக்தியென்று வந்தவர்கள் அதைச் செய்திருக்கலாமே!"

"நீர் வெறும் லக்ஷ்யவாதி! நடக்கக் கூடியதைச் சொல்லும்."

"எது நடக்கக் கூடாதது? ஸ்வாமியைப் பற்றிச் சொல்கிறீர்களே! நம்மைப் போன்ற சரீரம் கொண்ட மனிதர்களையே தெய்வமென்றெண்ணிச் சுமந்தவர் எத்தனைபேர் வேண்டும்? உள்ளத்திலே உண்மை அன்பும், சுமப்பதே ஒரு பாக்கியம் என்ற எண்ணமும் கொண்டவர்களைக் காட்டுகிறேன்! வாருங்கள்!"

ஒரு பெரியவருக்கும் மற்றவருக்கும் நடந்த சம்பாஷணையை இதுவரை மறைந்து கேட்டுவிட்டோம்! அப்படிக் கேட்பது தவறுதான்! பரவாயில்லை, தவறை முழுதும் செய்து முடிப்போம்! அவ்விருவரும் செல்லும் இடத்திற்கு நாமும் பின் தொடருவோம், வாருங்கள்.

## அப்பரே !

பதிமூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த தெய்வத் தமிழகத்திற் கல்லவா வந்துவிட்டோம்! 'வேத நெறி தழைத்தோங்க, மிகு சைவத் துறை விளங்க' வந்துதித்த திருஞான சம்பந்தரைக் காண்கிறோம்! அவர் பக்கலில் 'இடையருப் பேரன்பும், உழவாரத்தின் படையருத் திருக்கரமும்' கொண்ட வாகீசப் பெருந்தகையான நாவுக்கரசரையும் தரிசிக்கிறோம்! ஆமாம், இவர்கள் இருவரும் ஒன்று சேர்ந்தது எப்படி? முன்னவரோ பிள்ளைப் பிராயத்திலேயே ஞானப்பாலுண்டு, ஆண்டவனின் செல்வக்

---

குமரனே என்று வியக்கும் வண்ணம் பொற்றாளம், முத்துச் சிவிகை, குடை முதலிய சின்னங்கள் யாவும் பெற்று 'அருள் பெற்ற குழந்தை, அற்புதப் பிறவி' என்று யாரும் பரவசப்படும்படி பல்லக்கிலேயே பவனிவருபவர்.

பின்னவரோ, உலக அனுபவத்திலும், பிராயத்திலும் முதிர்ந்தவர்; சமணரின் வஞ்சகச் செயலுக்கெல்லாம் உள்ளானவர்; தெய்வத் தமிழ் பாடி, 'நாவுக்கரசர்' என்று ஆண்டவனாலேயே அழைத்து ஆளப்பட்டவரானாலும், தோளில் உழவாரப் படையுடனும் (ஆலயங்களில் முளைக்கும் புல், பூண்டுகளைச் செதுக்க உதவும் ஓர் கருவி), சிந்தையில் 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' எனும் சீரிய எண்ணத்துடனும், அடியார்க்கெலாம் அடியாராகத் தொண்டு செய்து வருபவர்.

இறைவனின் திரு அவதாரங்களைப்போல், புறத் தோற்றங்களில் வேறுபட்டவராயினும், தித்திக்கும் பைந் தமிழ் பாடும் புலமையும், சிவன் பாலேவைத்த நிலையான சித்தத்தையும் பெற்றிருந்தமையால் இவ்விருவர் உள்ளங்களும் ஒன்று சேர்ந்தன. 'இனம் இனத்தைச் சேரும்' என்பது நியதியல்லவா!

ஞானக் குழந்தையைக் காண வேண்டுமென்று வந்த நாவுக்கரசரை ஓடோடியும் சென்று தழுவிக்கொண்டு, "அப்பரே" என்று கண்களில் நீர் மல்க அழைத்தார் சம்பந்தர். அன்றிலிருந்து அப் பெயரே அவருக்கு நிலைத்து விட்டது. பிரிந்தவர் கூடியது போல் இருவரும் பெருமகிழ் வெய்தினார்கள். பல க்ஷேத்திரங்களுக்குச் சேர்ந்து சென்றார்கள்; பற்பல பதிகங்கள் பாடினார்கள். சைவ சமயத்தை வளப்படுத்தினார்கள்.

## அப்பர் எங்குற்றார்?

இத் தறுவாயில் தான் சமணர்களின் வெறியாட்டங்களை ஒடுக்கி, சைவ சமயத்தை நிலை நாட்ட மதுரைக்கு விஜயம் செய்ய வேண்டுமென்று சம்பந்தருக்கு அழைப்பு அனுப்பியிருந்தாள் மங்கையர்க்கரசி. செல்லக் கூடாதென்று அப்பர் தடுத்துத் தான் போவதாக வாதாடினார். காரணம், சமணர்களின் தீச்செயல்களால் தன் அன்பருக்கு ஏதாவது தீங்கு நேர்ந்துவிடுமோ என்ற பயம்!

சம்பந்தர் சம்மதிக்கவில்லை. கிளம்பும் வேளை சரியில்லை என்று கடைசி முறையாகத் தடுத்தார் அப்பர். கேட்க வில்லை! 'தானுறு கோளு நாளும் அடியாரை வந்து நலி யாத வண்ணம்' கோள் அறு பதிகம் பாடி இறைவன் மேல் பாரத்தைப் போட்டு விட்டுக் கிளம்பி விட்டார் சம்பந்தர்! தனிமையின் வேதனையைத் தாங்கிக்கொண்டு ஸ்தல யாத்திரை செய்ய வடக்கே யெல்லாம் சென்று விட்டு மீண்டும் சோழநாடு திரும்பினர் அப்பர்.

மதுரை சென்ற சம்பந்தரோ திருநீறின் பெருமை யைப் பாண்டியனுக்கு உணர்த்தி, சமணர்களை முறி யடித்து, சைவச் சிறப்பை நிலை நாட்டிவிட்டு வெற்றி வீர ராகத் திரும்பினர்! அவர் சோழநாட்டை மிதித்தவுடன் "என் அப்பர் எங்கே" என்று விசாரிக்கத் துவங்கிவிட் டார். அப்பர் இவர் வரவை நோக்கித் திருப்பூந்துருத்தி எனும் க்ஷேத்திரத்தில் தங்கியிருக்கிருரென்றறிந்து வேக மாகச் சென்ருர் சம்பந்தர் அவ்விடத்தை நோக்கி! ஊரின் சமீபத்தில் சிவிகை வரும் அரவம் கேட்டு விட்டது அப்பருக்கு! விரைந்து வந்தார் எதிர் கொண்டழைக்க! ஒரே தொண்டர்கள் கூட்டம்! "சமணத்தை முறியடித்த பர சமயக் கோளறியே, வருக! வருக!!, மறை நெறிச் சைவத்தை வாழவைத்த மாமறைச் சிறுவரே, வாழ்க! வாழ்க!!" இவ்வாறு தொண்டர்கள் முழக்கமிட்ட வாழ்த் தொலி அண்டமெல்லாம் பரவிற்று; எதிர் கொண்டு வந்த அப்பர் இந்தக் காட்சியிலே லயித்துப் போனர்; கூட்டத் திலே நுழைந்து மறைந்தும் போனர்! சிவிகையும் ஊருக்குள் வந்து சேர்ந்தது! அடுத்த கணம் பல்லக்கில் இருந்த வாறே அடக்கமுடியாத ஆவல் முகத்தில் தோன்ற, "அப்பர் எங்குற்ருர்? அப்பர் எங்குற்ருர்"? என்று கேட்கிருர் சம்பந்தப் பெருமான்! யார் கண்டார்கள்? ஒரு நிமிஷம் நிசப்தமாயிருந்தது. பிறகு பல்லக்கின் அடி யிலிருந்து மெதுவாக ஒரு குரல்வந்தது! "உம்மடியேன் உம்மடிகள் தாங்கிவரும் பெருவாழ்வு வந்து எய்தப் பெற்று இங்குற்றேன்"! ஆம்! அந்தக் குரல் அப்பரு டையது தான்!

'அபசார' மென்று குதித்தார் சம்பந்தர் சிவிகை யிலிருந்து; "என்னைச் சுமந்து வந்தது நாவுக்கரசப் பெருந்தகையா"; என்று 'உள்ள மிகு பதைப்பெய்தி'

வீழ்ந்து வணங்கினர்! அப்பரும் வணங்கினர்! கூடியிருந்த தொண்டர்களெல்லாம் இவ்விரு மெய்யன்பர்களையும் கை கூப்பி வணங்கினர்கள்! இதை நமக்குச்சொன்ன சேக்கிழாரும் மெய் மறந்து தான் பாடியிருக்கவேண்டும்!

பிள்ளையார் அதுகேளாப் பெருகுவிரை வுடனிழிந்தே
உள்ளமிகு பதைப்பெய்தி உடையவர சினைவணங்க
வள்ளலார் வாகீசரவர் வணங்கா முன்வணங்கத்
துள்ளுமான் மறிக்கரத்தார் தொண்டரெலாம் தொழுதுஆர்த்தார்

## எங்கு சென்றீர்கள்?

நாமும் மெய்மறந்து அந்த நூற்றுண்டிலேயே இருந்து விடப் போகிறோம்! நமக்குச் சொந்தமான இருபதாம் நூற்றுண்டிற்கே திரும்பி விடுவோம். வாருங்கள்! இங்கேயும் அப்படியொரு ரஸானுபவம் தரும் நிகழ்ச்சி நடந்திருக்கிறது! வைநாகரம் இராமனுதன் செட்டியார் என்பவர் ஒரு சிவநேசச் செல்வர். சிவ பூஜையில் ஈடுபாடு, சைவ நூல்களில் அபார ஆராய்ச்சி தமிழில் கவி பாடும் பெரும் ஆற்றல், இவையனைத்தும் கொண்ட அப் பெரியார், காஞ்சி காமகோடி பீடத்தை இப்போது அலங்கரிக்கும் ஆசார்யாளை 1926-ம் வருஷம் செட்டி நாட்டில், கடியாபட்டி என்ற விடத்தில் தரிசித்தார். கண்டது முதல் அந்த ஞான ஒளியிலே ஈடுபட்டவராய் ஒரு வாரமும் ஸ்வாமிகளுடனேயே தங்கிவிட்டார். அவருடைய பக்தியையும், கவிபாடும் திறமையையும் உணர்ந்து கொண்டவராய்ப் பெரியவாளும் இப் பெரியாருடன் பல மணி நேரங்கள் உரையாடல் செய்து கொண்டிருப்பார்.

அந் நகரத்தார்கள் ஒருநாள் சிவிகையில் ஸ்வாமிகளை எழுந்தருளச் செய்து, பெரியதொரு ஊர்வலம் ஏற்பாடு செய்தார்கள். பவனி வரும்போது பல்லாயிரக் கணக்கான மக்கள் கூட்டத்தில் ஸ்வாமிகளின் கண் செட்டியார் அவர்களை அங்குமிங்கும் தேடிக்கொண்டிருந்தது. பரம இங்கிதாளான ஆசார்யாள், "ஏன் அவர் வரவில்லை?" என்று யாரிடமும் கேட்காமல் இரவு ஒரு மணிக்கு ஊர்வலம் முடிந்து மடத்திற்கு வந்தவுடனேயே செட்டியாரைக்

---



# ஜோதிஷ தத்வம்.

ஜோதிஷப் பகுதி.

ஜோதிஷபானு E. S. K. ஸ்வாமி, பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்,
4, கிருஷ்ணமாசாரி தெரு, தி. நகர், சென்னை-17.

**ராமு :**-ஏனப்பா வேதம்! நேற்றிரவு 8-மணிக்கு என்னைச் சந்திப்பதாகச் சொன்னாயே, எங்கே போய்விட்டாய்?

**வேதம் :**-நேற்று வருஷப்பிறப்பல்லவா? கந்தர் கோவிலில் இரவு பஞ்சாங்க சிரவணத்திற்குப் போய்விட்டேன். வேலந்தூர் பிரம்மஸ்ரீ சோமுசாஸ்திரிகள் பிரசங்கம் வெகு ஸாரமாய் இருந்தது.

**ரா :** அட பயித்தியமே! நீயும் ஒரு பஞ்சாங்கக்கார நபராய் மாறிவிடுவாய் போலிருக்கிறதே! இந்த வயதில் உனக்கேனடா இந்தப் பித்து? என்ன அவர் அப்படிப் பிரமாதமாய்ப் பேசிவிட்டார்?

**வே :** உனக்குத்தான் எந்த சாஸ்திரத்திலும் நம்பிக்கையில்லையே! உனக்குச் சொல்லித்தான் என்ன பயன்?

**ரா :** ஒரே யடியாய் அப்படிச் சொல்லிவிடாதே! மற்ற சாஸ்த்திரங்கள் கிடக்கட்டும். பஞ்சாங்கத்தை நம்பாதிருக்க முடியுமா? அதற்காகத்தான் புரோகிதர்கள் இருக்கிறார்களே!

**வே :** ஸர்வ சுலபமாய் நாமே தெரிந்துகொள்ளக் கூடிய விஷயங்களைப் பிறர் உதவியால் பெறுவானேன்? நீ B. A. படித்து பாஸ்பண்ணினாய். உனக்கு இதைக் கற்பதுதானா சிரமம்?

**ரா :** அது உண்மைதான். பஞ்சாங்கம் என்பது என்ன? அதை வருஷப் பிறப்பன்று ஏன் படிக்கவேண்டும்? அந்த விபரங்களை எனக்கு முதலில் தெளிவுபடச் சொல்லு பார்க்கலாம்.

**வே :** உனக்கு சிரத்தையும், தெய்வபக்தியும் இருக்குமானால் கேட்டுத் தெரிந்துகொள். இல்லையேல் நியூஸ் பேப்பரைப் படித்து அதையே நம்பி காலத்தைக் கழித்துவா. நியூஸ் பேப்பரைப் படித்து வந்தால் கடைத்தேறி விடலாம்.

**ரா :** உன் பிரசாரம் இருக்கட்டும். பஞ்சாங்கமென்பது என்ன? அந்தப் பெயர் அதற்கு ஏன் வந்தது?

**வே :** பஞ்ச அங்கங்களுடன் கூடியிருக்கும் ஒரு சாஸ்திரத்திற்கு பஞ்சாங்கம் எனப் பெயர். பஞ்ச என்றால் ஐந்து என்பது

பொருள். ஐந்து அங்கங்களாவன ?— வாரம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரணம் என்பதாகும்.

ரா : வாரம் என்பது தெரிந்த விஷயந்தான். ஏழு கிழமைகளைத்தானே சொல்கிருய்.

வே : ஆமாம், ஒவ்வொரு கிழமையும் எந்தப் பெயரைத் தாங்கியிருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். உலகத்தில் பிரகாசத்தைக் கொடுத்து அதனுல் பல வேற்றுமைகளைக் காணச் செய்பவர் சூரியன் ஒருவரே யாகும். அவருக்கு ஞாயிறு எனப் பெயராகும். அவர் நவக்கிரகங்களில் முதல்மையான ஒரு கிரகம். அவருக்குப் பல பெயர்கள் உண்டு. ஆகையால் ஆதிக் கிரகமாதலால் அவருடைய பெயரிட்டே ஆதிவாரம் என்றும் ஞாயிற்றுக் கிழமை என்றும் சொல்லிவருகிரேும்.

ரா : ஸரிதான், கிழமைகளுக்கு கிரஹத்தின் பெயரை ஏன் வைக்கவேண்டும் ?

வே : இவ்வுலகம் பூராவுமே தோற்றமயமாகத்தான் இருக்கிறது. அதைச் சொன்னுல் உனக்குப் புரியாது. பொதுவாய் ஒன்பது கிரகங்களின் ஆதிக்க மூலமாகத்தான் இவ்வுலகத்தின் அசைவு ஏற்பட்டு வருவதைக் காண்கிரேும்.

ரா : அது எப்படி 9-என்று தீர்மானம் சொல்லுகிருய் ? **யுரேனஸ்** என்றும், **நெப்டியூன்** என்றும், **ப்ளுட்டோ** என்றும் இப்படி பல கிரகங்களிருப்பதாகப் பேப்பரில் படித்து வருகிறேன். மற்றும் நாளுக்கொரு கிரஹம் புதிது புதிதாய் கண்டுபிடித்து வருகிருர்களே, அவைகள் கிரஹங்கள் இல்லையா ?

வே : நியாயந்தான், பற்பல இதர கிரஹங்கள் எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பது நவக்கிரஹங்கள்தான். அதனுலேயே நடைமுறையில் நவக்கிரஹ சாந்தி, நவக்கிரஹ ஆராதனே, நவக்கிரஹ கோயில் என்று ஒன்பது கிரஹங்கள் ஆராதிக்கப்பட்டு வருகின்றன.

ரா : அப்படியானுல் மற்ற கிரஹங்களுக்குப் பலனே கிடையாதா ? அவைகள் நன்மை தீமைகள் ஒன்றையும் செய்வதில்லையா ?

வே : ஒவ்வொரு கிரஹத்திற்கும் பலன்கள் வர்ணிக்கப்படிருக்கின்றன. என்ருலும் அவைகள் உபக்கிரஹங்களே

யாகும். இதை ஒரு உதாரணத்தால் சொல்லுகிறேன் கேள். நீ பஞ்ச வாயுக்களைப்பற்றி கேட்டிருக்கிறாயா ?

ரா : ஆமாம்! பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்ற வாயுக்களைப்பற்றித் தெரியும். அதனால் என்ன சொல்லப்போகிறாய் ?

வே : இவ்வைந்து வாயுக்களும் இல்லாவிட்டால் சரீர ரதம் ஓடாதல்லவா? ஆனால் அவ்வைந்தையும், ஆதாரமாகக்கொண்டு எவ்வளவு உபவாயுக்கள் இருக்கின்றன என்பதை அறிந்திருக்கிறாயா ?

ரா : வேதம்! போதும் நிறுத்து. அந்த வேதாந்தமெல்லாம் எனக்கு வேண்டாம். பஞ்சாங்கத்தைப் பற்றிக் கேட்டால் என்னை வேதாந்தத்தில் இழுத்து வந்துவிட்டாயே.

வே : அட பயித்தியமே! உபக்கிரஹங்களுக்கு உதாரணமாக உப வாயுக்களைப்பற்றிச் சொன்னேன். ஆகையால் சூரியன் முதலான 9-கிரஹங்களில் 7-கிரஹங்கள்தான் பிரதானமானவைகள். ராகு கேது என்ற இரண்டும் சாயா கிரஹங்கள். ஆதலால் 7-கிரஹங்களின் பெயரைத்தான் நாம் ஒவ்வொரு நாளுக்கும் பெயரிட்டு ஸ்மரித்து வருகிறோம்.

ரா : ஏழு கிரஹங்கள் எவைகள்? ஒரு வாரமாக இருப்பது தெரிந்தது. ஆனால் பஞ்சாங்க சிரவணம் எதற்காகச் செய்யவேண்டும் ?

வே : தினப்படியிலேயே நாம் கிரஹங்களைக் கிழமை வாயிலாய் ஸ்மரித்துவரும்போது மற்ற திதிகள், பக்ஷங்கள், மாதங்கள், அயனங்கள், வருஷங்கள் முதலிய விபரங்களைத் தெரிந்து கொள்ளவேண்டாமா ?

ரா : அதனால் என்ன பலன் ஏற்படுகின்றன ?

வே : பிரதி தினமும் கிரஹங்கள் மணிக்கு மணி மாறி வருகின்றன. அவைகளுக்கு ஹோரை என்பது பெயர். ஹோரை என்பதைத்தான் (Hour) என்று சொல்வது. இந்த ஹோரைகள் சூரிய ஹோரை முதலாகத்தொடர்ந்து மணிக் கொருதரம் மாறுகின்றன. ஒவ்வொரு ஹோரைக்கும் பலாபலன்கள் மாறுபடும்.

ரா : வேதம்! இன்று நாழிகையாய்விட்டது. நாளைய தினம் மற்ற விபரங்களைத் தெரிந்துகொள்கிறேன்.

(தொடரும்)

# கல்கி புராணம்.

தந்தையின் விருப்பப்படி கல்கி ராஜஸூயம் வாஜபேயம் அஶ்வமேதம் முதலிய யக்ஞங்களால் பகவானை ஆராதித்தார். கிருபர் பரஶுராமர் வஸிஷ்டர் வியாஸர் தௌம்யர் அக்ருதவ்ரணர் அஶ்வத்தாமா மதுச் சந்தஸ் மந்தபாலர் முதலிய மஹர்ஷிகளைக் கொண்டு கங்கா யமுனைகளிடையே யாகம் செய்து அவப்ருதஸ்நாநம் செய்தார். ஸகல வேத சாஸ்த்ரங்களையும் நன்குணர்ந்த வேதியர்களுக்கு பக்ஷ்யபோஜ்யங்களுடன் அன்னதாநம் செய்தார்.

அந்த யாகத்தில் அக்நி பகவானே சமயல் செய்தார். வருணனே தீர்த்தமளித்தார். வாயுதேவர் பரிமாறினார். பற்பல வாத்யங்கள் கோஷித்தன. ஸந்தோஷமடைந்த கல்கி சிறுவர் வ்ருத்தர் ஸ்திரீகள் முதலிய எல்லோருக்கும் அபரிமிதமான ஆடை ஆபரணங்களையும் ரத்னங்களையும் அள்ளி அளித்தார். ரம்பை ஆட நந்தி தாளம் போட ஹூஹூ பாடினாள். தந்தையின் உத்திரவுபடி சிறிது நாள் கங்கா தீரத்தில் வஸித்தார். பிராம்மணர்கள் புராண இதிஹாஸங்களையும் பண்டைய அரசர்களின் சரிதத்தையும் ஸபையில் கூறிக்கொண்டிருந்தார்கள். ஒருநாள் நாரத ரிஷி தும்புருவுடன் வர விஷ்ணுயஶஸ் தக்கபடி அவரை வரவேற்று பூஜித்து எனது பாக்யமே பாக்யம்! நூறு பிறவிகளில் செய்த புண்யங்களால் தான் தங்கள் தர்ஶநம் கிடைத்தது. தங்கள் தர்ஶனமே மோக்ஷந்தரும். உம்மைத் தர்ஶித்து பூஜித்ததால் நான் செய்த கர்மா ஸபல மாயிற்று. தேவர்களும் பித்ருக்களும் ஸந்தோஷ மடைந்தனர்.

உம்மைப் பூஜித்தால் விஷ்ணு பூஜை செய்ததாகும். உமது தர்ஶனம் பாபங்களைத் தொலைக்கும். உம்மை ஸ்பர்சித்தால் ஸகல பாக்யங்களுமுண்டாகும். ஸத்ஸங்கத்தின் பெருமை வர்ணிக்க முடியாதது. ஸாதுக்களின் ஹ்ருதயமே தர்மம். வாக்குகள் ஸநாதந தர்மம். கர்மாக்களோ பாபகர்மக்ஷயமாம். ஸாதுக்கள் ரூபமாகயிருப்பவர் விஷ்ணு. பக்தர்களது தேஹமே விஷ்ணு. அதர்மத்தை அகற்றி தர்மத்தை நிலைநாட்ட அவனியில் அவதரித்த பகவானுடைய உடலைப்போல் திவ்ய தேஹமாம். பஞ்ச பூதங்களாலாகிய ப்ராக்ருத உடலல்ல என எண்ணுகிறேன். மாயாமயமான ஸம்ஸாரக் கடலின் கரையை விஷ்ணு பக்தி எனும் தோணியால் கடந்தவர் நீர். யாதனை எனும்

நரகத்தில் விழாமல் எந்த கர்மாவால் நான் விடுபட்டு ஸுகம் பெறுவேனோ அந்த கர்மாவைக் கூறுங்கள் என விஷ்ணு யஶஸ் நாரதரை வேண்டினார்.

நாரதர், அஹோ! ஆஶ்சர்யம்! ஸர்வ ஆஶ்சர்யகர மானது மாயை! அது எல்லோரையும் ஆட்டி வைக்கின்றது. பகவானுடைய தாய் தந்தைகளையும் விடவில்லையே! பூர்ணனை மஹாவிஷ்ணுவே புத்ரனாகத்தோன்றி இருக்கும் பொழுது கூட, அவரைவிட்டு முக்திக்கு மார்க்கம் என்னைக் கேட்கிறாரே விஷ்ணுயஶஸ்! என்று தனக்குள் யோசித்து; பிரும்மயஶஸ்ஸின் புத்ரரான விஷ்ணு யஶஸ்ஸை ஏகாந்தத்தில் அழைத்து, பிரும்ம ஸம்பத் விருத்தியாகும்படியான விஷயத்தைக் கூறினார். தேஹம் அழிந்தபின் மற்றொரு தேஹத்தை எடுக்கும் ஜீவனைப் பார்த்து என்ன செய்வதென மாயை கூறுகிறது. அதைக் கேள். விந்த்ய மலையில் மாயை அழகான பெண் உருவெடுத்து ஜீவனைப் பார்த்து ஓ! ஜீவனே! நான் மாயை! என்னை விட்டு விட்டு நீ எப்படி ஜீவிக்க விரும்புகிறாய்?

**ஜீவன்:** ஓ மாயே! ஜீவனுக்கு ஆஶ்ரயமான இந்த உடலால் நான் ஜீவிக்கவில்லை. உடலில்லாவிடில் நான் என்ற புத்தி எப்படி ஏற்படும்? அதற்காகவே இந்த உடல் எனக்கு.

**மாயா:** தேஹபந்தத்தில் எப்படி எனது என்ற பற்றோ, அப்படியே மநதிலும் என் மநம் என பற்றுண்டாகிறது. மாயா ஸம்பந்தமில்லாமல் எப்படி நீ கர்மாவைச் செய்வாய்?

**ஜீவன்:** மாயே! நானில்லாமல் உடலுக்கு மாத்ரம் எப்படி விஷயங்களில் ஆசை உண்டாகும்?

**மாயா:** மநிதன் மாயையால் தான் ஜீவிக்கிறான். அறிவை இழந்து மாயையால் தான் சேஷ்டை செய்கிறான். மாயையால் தான், யானைவிழுங்கிய விளாம்பழத்தை அது உடையாமல் பூர்ணபலம் போலிருப்பதால் பழம் என்றே எண்ணுவது போல் ஸாரமில்லாத பொருள்களை எல்லாம் ஸாரமுள்ளதாக உலகம் நினைக்கின்றது. அது என்னுடைய ஶக்தி யல்லவா?

**ஜீவன்:** எனது சேர்க்கையால் தான் நீ பலவகை நாம ரூப முள்ளவளாக உலகை உண்டாக்குகிறாய்! துஷ்ட

ஸ்த்ரீ தன் பதியை நிந்திப்பதுபோல் மூடையான நீ என்னை யே நிந்திக்கிறாய். ஸூர்யன் உதித்தால் இருள் அகலுவது போல் ஞானம் வந்தால் நீ அழிவாய். நான் இல்லையேல் நீ எங்கே? மேகம் ஸூர்யனை மறைப்பது போல் நீ என்னை மறைக்கிறாய்! உலக வடிவமாகத் தோன்றிய மாயையே! உனக்கு ஆதியுமில்லை! அந்தமுமில்லை! இடையிலே தோன்றி இந்த்ர ஜாலக்காரனைப் போல் பல லீலைகளைச் செய்கிறாய்.

ஜீவனும் மாயையும் கூறியபடி விஷயத்தில் ஈடுபடாததும் நித்யமும் மனோ வ்யாபார மில்லாததும் பூத ஸம்பந்தமில்லாததுமான ஜீவன் சரீரத்தை விட்டது. மாயையும் கைவிட்டாள் அதை. கோபமுள்ள மாயை, கட்டை போலும் சுவர்போலும் உணர்ச்சி இல்லாதவனே! நான் இல்லாவிடில் உலகில் நீ வாழமாட்டாய்! என ஜீவனுக்குச் சாபமளித்தாள். ஹே விஷ்ணுயஶஸே மாயை,யும் ஜீவனும் ஸகல உலக வடிவனுயிருக்கின்ற உனது புத்ரனைச் சார்ந்தவைகளே. அதை அறிந்து அந்த பகவானையே ஸதா நினைத்துக்கொண்டு உலகில் ஸஞ்சாரம் செய்! அந்த மாயையை ஜயித்து முக்தி பெறுவாய். ஆசையை அகற்று. என்னுடையது இது, என்ற நினைவை விட்டொழி. உலகில் பற்று வைக்காதே. ஶாந்தனுக இரு. உலகெல்லாம் விஷ்ணுவினிடம் இருக்கிறது. விஷ்ணு உலகிலே வஸிக்கிறார் என்று எண்ணு. எனக்கூறி நாரதரும் தும்புருவும் கல்கியை ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்காரம் செய்து கபிலாஶ்ரமம் சென்றார்கள். விஷ்ணுயஶஸ்ஸும் தனது புத்ரனுக உள்ளவர் ஜகன்னுதனை விஷ்ணுவே என்று எண்ணி அவரை தியானம் செய்ய வனம் சென்றார். பதரிகாரண்யம் சென்று கடுந்தவம் புரிந்து பூதஉடலை உதறித்தள்ளி பிரும்ம ஸ்வரூபத்தில் லயமானுர். ஸுமதி பதியின் உடலைத்தீயிலிட்டுத் தானும் தீக்குளித்தாள். முனிவர் மூலம் பெற்றோர் உடலை விட்டதைக்கேட்டு கல்கி கண்ணீர் விட்டு விதிப்படி அவர்களுக்குப் பரலோக கார்யத்தைச் செய்தார். பின்னர் தேவர்களும் " நாமும் இவர் இராஜ்யத்தில் ஒரு குடியாக வாழமாட்டோமா " என்று விரும்பும்படி நீதி தவருமல் செவ்வனே ராஜ்ய பாரம் செய்தார் கல்கி.

புண்ய தீர்த்தங்களைப் புண்யமாகச் செய்யும் பாரசுராமர் மஹேந்திர மலையிலிருந்து தீர்த்தயாத்ரைக்குச்

சென்று வழியில் சம்பள நகரில் கல்கியைத் தர்சிக்க வந்தார். அவரைக் கண்டவுடன் ஆநந்த பரவசராகி கல்கி மனைவிகளுடன் கூட மஹர்ஷியைச் சிறந்த முறையில் பூஜித்தார். ஷட்ரஸத்துடன் அன்னமளித்து மிருதுவான விலையுயர்ந்த சயனத்தில் படுக்கவைத்தார். அவரது காலை தனது கரங்களால் பிடித்துக் கொண்டே அவரைப் பார்த்துக் கூறினுர். ஸத்குரோ! உமது அருளால் ஸகல கார்யங்களும் பூர்த்தியாயின. சசித்வஜ புத்ரியான எனது மனைவியின் ப்ரார்த்தனையைக் கேட்டு அருள் புரியுங்கள் என்றுர். ரமா தேவியும் குருவின் திருவடியை வணங்கி ப்ரபோ! எந்த வ்ரத நியமங்களால் பதியைப்போன்ற ஸுதன் எனக்கு உண்டாவான்? என வேண்டினுள்.

## த்ருதீயாம்சம்—பதினேழாம் அத்தியாயம்.

ரமா தேவியின் பிரார்த்தனையைக் கேட்டு கல்கியின் அபிப்பிராயத்தையும் உணர்ந்து பரசுராமர் ருக்மிணீ வ்ரதத்தைச் செய்யும்படி உபதேசித்தார். அந்த வ்ரதத்தினுல் அவள் புத்ரனையும் ஸகல விதமான போகபாக்யங்களையும் நித்ய யௌவநத்தையும் பெற்றுள். அந்த விரதத்தை யார் எப்படி அநுஷ்டித்ததென்பதையும் விளக்கினுர். முன்னர் வ்ருஷ பர்வா என்பவரின் பெண்ணுன ஶர்மிஷ்டா என்பவள் தோழிகளுடன் ஸரஸ்ஸில் ஸ்நாநம் செய்து கொண்டிருக்கும்போது பார்வதீ பரமேஶ்வரர்கள் அவ்வழியாக மேலே செல்வதைத் தர்ஶித்தாள். பகவானது எதிரில் அபசாரம் செய்யக் கூடாதென கரையில் வந்து வஸ்த்ரமணிய ஆரம்பித்தாள். அச்சமயம் வ்ருஷபர்வாஸுரன் புரோஹிதரான ஶுக்ராசாரியரின் மகள் தேவயானி ஶர்மிஷ்டையின் புடவையைக் கட்டிக்கொண்டாள். இதைக் கண்டு கோபங்கொண்ட ஶர்மிஷ்டை ஏ, பிச்சக்காரி! தேவயானீ! எனது புடவையை நீ எப்படி கட்டிக் கொண்டாய்? என்று அவளை வஸ்த்ரத்தால் கட்டி கிணற்றில் தள்ளிவிட்டு வீட்டிற்குச் சென்றுள். தற்செயலாக அங்கு நீர் அருந்துவதற்காக வந்து நீரில் கையை வைத்த யயாதியின் கரத்தில் தேவயானியின் உடல் அகப்பட்டது. உடனே அவளைக் கரையேற்றி அரசன் அவளது வ்ருத்தாந்தத்தைக் கேட்டு அவளிஷ்டபடி அவளை மணப்பதாகவும் கூறிச் சென்றுன். தேவயானி தந்தையினிடம்சென்று நடந்தவற்றைக்கூறி அவ்வரசனை விட்டு வேறிடம் செல்லலாம் என்றுள். சுக்ரரும் அதன்படி புரோஹிதர் பதவி

தனக்கு வேண்டாமெனக் கூறி அரசனை விடைக்கேட்டார். விருஷ பர்வா அவரைப் பணிந்து குற்றத்திற்கேற்றபடி தன்னையும் தன்மகளையும் சிக்ஷித்துத் தன்னைவிட்டு அகலா திருக்கும்படி வேண்டினன்.

ராஜன்! எனது தந்தை உம்மிடம் இருக்கவேண்டு மானல் உமது புத்ரி ஶர்மிஷ்டை எனக்கு அடிமையாக இருக்கவேண்டும் என்ருள் தேவயாநி. விருஷ பர்வா புரோஹிதரைவிட மநமில்லாமல் புத்ரியை தேவயானிக்கு அடிமை யாக்கினன். சுக்ரர் தனது மகளின் விருப்பப்படி யயாதி மன்னனுக்கு அவளை யளித்து மணம் செய்வித் தான். வேந்தே! ஶர்மிஷ்டையை நீ காமத்துடன் தீண்டி ஞல் உடனே கிழவனுவாய் எனவும் கூறினர். யயாதி நூற்றுக்கணக்கான தாஸிகளுடன் தேவயானிக்குப் பணி விடை செய்யும் ஶர்மிஷ்டையைக் கண்ணெடுத்தும் பாரா மல் இருந்தார். ஶர்மிஷ்டை தனது நிலையை நினைத்து வருந்தி ஒரு நாள் வநம்சென்று கங்கா தீரத்தில் எண்ணி றந்த பெண்களுக்கு விரதத்தைச் செய்து வைக்கும் விச் வாமித்ரரைக் கண்டாள்.

எட்டுதள பத்மத்தில் ருக்மிணீ தேவியை க்ருஷ்ண னுடன் ஆவாஹநம் செய்து நாலுபுறமும் வாழைகட்டி மேலே பட்டினல் பந்தலமைத்து திவ்ய பரிமள கந்தம் வீசும் புஷ்பங்களால் தூப தீப நிவேத்தியங்களுடன் பூஜை செய்தார். பிராம்மணர் வேத பாராயணம் செய்ய புருஷஸூக்தத்தைக் கூறி பஞ்சாமிருதம் பஞ்ச கவ்யம் முதலியவைகளால் அபிஷேகம் செய்தார். பத்ர பீடத்தில் ஷோடஶோபசார பூஜை நடந்தது. வழி நடந்த ஶ்ரமம் அகல பாத்யம் முதலியவைகளை அளித்தார். தூர்வை சந்தந கந்தம் நிறைந்த அர்க்யத்தை ஏற்றுக் கொள் ருக்மிணீ நாத! என அர்க்ய மளித்தார். அதே போல் ஆசமநீயம் கந்தம் வஸ்த்ரம் புஷ்பம் யக்ஞோப வீதம் ஆபரணம் அத்புதமான பக்ஷ்ய போஜ்யங்கள் தூபம் தீபம் முதலியவைகளையும் அளித்து நமஸ்காரம் செய்து பிரார்தித்தார். இதைக்கண்டு பேரானந்தமடைந்த ஶர்மிஷ்டை அந்த ஸ்த்ரீகளை அணுகி ஓ! தேவிகளே! ராஜ புத்ரியாகப் பிறந்து பரம தௌர்பாக்யத்தை அடைந்து உங்களைச் சரணமடைந்த என்னைக் காப்பாற்றுங்கள்.

இதைக் கேட்டு அவளிடம் பஶ்சாதாபம் கொண்ட ஸ்த்ரீகள் பூஜைக்கு வேண்டிய பொருள்களைத் தந்து

அவளையும் அந்த வ்ரதம் செய்யும்படி கூறினார்கள். ஶர்மிஷ்டை அந்த விரதத்தைச் செய்ததால் யயாதியின் மநம் இளகி கிழவனுவோம் என்பதையும் மறந்து ஶர்மிஷ்டையை மணந்தார். குழந்தைகளும் உண்டாயின. ஸ்திரமான யௌவநத்தையும் பெற்றாள். அஶோக வநத்தில் ஸரமையின் ஸஹாயத்தால் ஸீதாதேவி இந்த ருக்மிணீ வ்ரதத்தைச் செய்தாள். அதனால் ஸ்ரீராமன் ராக்ஷஸர்களைக் கொன்று ஸீதையை அழைத்துச் சென்றார். திரௌபதி தேவி பிருஹதஶ்வர் என்பவர் மூலமாக இந்த ருக்மிணீ வ்ரதத்தை அநுஷ்டித்து துக்கத்திலிருந்து விடுபட்டு ஸகல பாக்யங்களையும் பெற்றாள். ஸத்புத்ரர்களையும் அடைந்தாள். இவைகளைக்கேட்டு ரமா பரசுராமரிடம் இந்த விரதத்தை உபதேசம் பெற்று வைஶாக ஶுக்ல த்வாதசியில் ஆரம்பித்து நான்கு வர்ஷங்கள் ஶ்ரத்தையுடன் செய்தாள். கையில் பட்டுக்கயறு கட்டிக்கொண்டு பிராம்மணர்களுக்கு அன்னதாநம் செய்து நிரம்ப தக்ஷிணை தந்து பதியுடன் பாலன்னமுண்டாள். அதனால் மேகமாலன் பலாஹகன் என்ற இரு புத்ரர்களைப் பெற்றாள். அவர்கள் யக்ஞம் தாநம் தபஸ் முதலியவைகளால் தேவர்களுக்குப் பரம ஸந்தோஷத்தைத் தந்தனர். மிக்க உத்ஸாக முள்ளவர்களாகவும் மஹா வீர்யவான்களாகவும் பெற்றோருக்குப் பேரின்பமளிப்பவர்களாகவும் இருந்தனர். இது சிறந்த விரதமென்றுணர்ந்து ஸகல சம்பத்துகளையும் தருமென்று நம்பிக்கையுடன் ஶ்ரத்தையாக இதை அநுஷ்டிப்பவர் இவ்வுலகில் பெறக்கூடிய ஸகல பாக்யங்களையும் பெற்று முடிவில் பரம யோகிகளுக்கும் கிட்டாத சிறந்த கதியைப் பெறுவர்.

## த்ருதீயாம்சம்--பதினெட்டாம் அத்தியாயம்.

ஶம்பள நகரத்தில் பகவான் தனது ஸஹோதரன் புத்ரன் க்ஞாதி பந்து முதலியவர்களுடன் ஆயிரம் ஆண்டுகள் ஸுகமாக வாழ்ந்தார். அந்த நகரம் அமராவதி போலிருந்தது. பவித்ரமான பகவானது பாதாரவிந்தத்திலிருந்து அறுபத்தெட்டு புண்ய தீர்த்தங்கள் உண்டாயின. அது முக்தியைத் தரும் நகரமாக இருந்தது. ரமையுடனும் பத்மையுடனும் சேர்ந்து இந்த்ரனளித்த இஷ்டப்படி செல்லும் விமானத்திலேறி சிறந்த மலை வநம் நதி குஞ்ஜம் முதலிய இடங்களுக்குச் சென்று இன்பம் அநுபவித்தார். நீலமலையிலுள்ள விசித்ரமான குஹையில்

நுழைந்து ஆயிரக்கணக்கான தோழிகளுடன் கூட ரமைக்கும் பத்மாவிற்கும் இன்பமளித்தார். சிறிது நேரத்திற்கெல்லாம் பகவான் திடீரென லீலையாக மறைந்தார். ரமாவும் பத்மாவும் பதியைக் காணுத துக்கத்தால் கதறினர். விரஹவேதனையால் விம்மி விம்மி அழுதனர். மைகலந்த தம் கண்ணீரால் கல்கியைப்போலும் அவரது கிளியைப்போலும் சித்ரமெழுதி அதற்கு ஸகல ஆபரணங்களையும் அளித்து அதை ஆலிங்கனம் செய்து கொண்டனர்.

திக்கு திக்காகத் தேடினர். பகவான் திடீரென அவர்கள் முன்னே தோன்றினர். அளவுகடந்த ஸந்தோஷமடைந்த அனைவரும் பகவானை, ஆவலுடன் வரவேற்றுப் பூஜித்தனர். சூழ்ந்து நின்று இமை கொட்டாமல் முதல் முறைக் காண்பது போல் அவர்மீது வைத்த கண்ணை எடுக்காமல் தர்சித்தனர். வைப்ராஜிகம் சைத்ரரதம் நந்தநவனம் முதலிய இடங்களுக்கு விமானமூலமாக அனைவர்களுடனும் சென்று ஆநந்த மளித்தார். ஶ்ருங்கார ஶாஸ்த்ரமறிந்த கல்கியும் ஸ்த்ரீகளும் பல்வகையான லீலைகளைச் செய்து களைத்து ஸரஸ்ஸில் இறங்கி சிறிது நேரம் ஜலக்ரீடை செய்தார்கள். இப்படி பகவான் செய்த லீலையைப் பக்தியுடன் கேட்பவர்களும் படிப்பவர்களும் ஸம்ஸார துன்பத்தைக் கடந்து பேராநந்தப் பெருங் கடலில் புகுவர்.

## த்ருதீயாம்சம்—பத்தொன்பதாம் அத்தியாயம்.

தேவர்களும் கந்தர்வ கின்னரர்களும் மஹர்ஷிகளும் பிராம்மணோத்தமர்களும் பகவானைத் தர்சிக்க ஒரு ஸமயம் ஶம்பள நகரம் வந்தார்கள். ஸபையில் ஶரணாகதி அடைந்தவர்க்கு அபய ப்ரதாந மளிக்கும் தேஜோராஶியான பகவானைத் தர்ஶித்தார்கள். கருத்த திருமேனி உள்ளவரும் பருத்து நீண்ட கைகள் உள்ளவரும் மின்னல்போல் பிரகாஶிக்கும் கிரீடமுள்ளவரும் ஸூர்யனைப்போல் ஜ்வலிக்கும் குண்டலங்களை அணிந்தவரும் புன்னகையுடன் பக்தர்களிடம் ஸரஸ ஸல்லாபம் செய்பவரும் கண் பார்வையாலேயே பகைவர்களையும் வசப் படுத்துபவரும் கருணைக் கடாக்ஷத்தால் ஸகல தாபங்களையும் போக்குபவரும் முக்தாஹாரம் சந்த்ர காந்த மணி பதக்க மிவைகளைத் தரித்திருப்பவரும் பீதாம்பர மணிந்தவரும் ஸர்வ வகையான ஆநந்தங்களும் ஒன்றுகூடி உட லெடுத்தது

போன்றவரும் இயற்கையாலும் ஆடை ஆபரணங்களாலும் தேஜோமயமாய் பிரகாசிப்பவருமான பகவான் கல்கியை அனைவரும் வணங்கித் துதித்தனர்.

ஸமஸ்த க்லேசங்களையும் போக்குபவரே! ஸர்வ ப்ராணிகளுக்கும் நாயகரே! தங்களை நினைப்பவரின் தாபங்களை அகற்றி ஸாரூப்யமுக்தி அளிப்பவரே! மேகம் போன்ற திருமேனி உள்ளவரே! கௌஸ்துப மணியால் உலக இருளை நீக்குபவரே! மனைவி மக்களுடன் உமது திருவடியைச் சரணமடைந்தோம். எங்கள் விருப்பப்படி பூமியில் அவதரித்து துன்பமளிக்கும் துஷ்டர்களையும் தர்மத்தைக் கெடுக்கும் அதார்மிகர்களையும் அழித்தீர். தர்மம் நான்கு பாதங்களுடன் ஓங்கி வளரச்செய்தீர். ஸகல உலகும் இன்புற்று சுகமாக வாழ்ந்து தங்களை வாழ்த்துகின்றது. பூமியில் ஸகல கார்யமும் முடிந்ததால் தாங்கள் வைகுண்டம் வரவேண்டும் என வேண்டினர். இதைக் கேட்டு பகவான் வைகுண்டம் செல்லத் தீர்மானித்தார். தனது புத்ரர்களை அழைத்து முடி சூட்டி ராஜ்யத்தை நீதியுடன் பரிபாலனம் செய்யும்படிக் கூறினர். பிரஜைகளை அழைத்துத் தனது பிரயாணத்தைப் பற்றிக் கூறினர். எல்லோரும் அதைக் கேட்டு தந்தையை விட்டுப் பிரியும் தநயர்போலும் தாயைவிட்டுப் பிரியும் கன்று போலும் கதறினர்கள். ஓ நாத! தர்மக்ஞ! எங்களைக் கைவிடக் கூடாது. தாங்கள் உள்ள இடத்தில் நாங்களும் இருப்போம். குடும்பத்திலுள்ளவரை, பிரியமான வீடு பிள்ளைகள் பொருள் எல்லாம் இங்கிருந்தாலும் எங்களது மநமும் பிராணனும் தங்களுடன் கூடவே கிளம்புகிறது. தாங்கள் யக்ஞ புருஷன். உங்களுடன் இருந்தால்தான் எங்கள் மநம் ஶாந்தி பெறும் என்றனர். அதைக் கேட்ட பகவான் அவர்களுக்கு ஆறுதல் கூறி மனைவிகளுடன் கூட வநஞ்சென்றார். முனிகணங்களுடன் கூட மநதிற்கு மிக ப்ரியமான ஹிமாலயம் சென்றார். தேவகணங்கள் சூழ கங்கா தீரத்தில் கொஞ்ச காலம் வஸித்து தனது ஆத்ம ஸ்வரூபத்தை நினைத்தார். உடனே சங்க சக்ர கதாபாணியும் பீதாம்பர தாரியும் கிரீட குண்டலதாரியுமான திவ்ய தேஹம் தோன்றிற்று. தேவர்கள் அனைவரும் புஷ்பமாரி பொழிந்து போற்றினர்.

தேவ துந்துபி முழங்கிற்று. திவ்யரூபியான பரமனைக் கண்டு ஆச்சர்யமடைந்து ஸ்தோத்ரம் செய்தார்கள். ரமையும் பத்மாவும் தங்கள் உடலைத் தீயிலிட்டு

பகவானை அடைந்தார்கள், தர்மமும் கிருதயுகமும் பகவதாக்ஞையால் பயமின்றி பூமியில் ஸஞ்சரித்தன. தேவாபியும் மருவும் கல்கியின் கட்டளைப்படி தர்ம நீதியுடன் பிரஜைகளைப் பரிபாலனம் செய்தனர். விஶாகயூபன் பகவான் வைகுண்டம் சென்றதைக் கேட்டு புத்ரனிடம் ராஜ்யத்தைத் தந்து தபோவனம் சென்றார். மற்ற மன்னர்களும் கல்கியின் விரஹத்தால் வருந்தி ராஜ்யசுகத்தில் வெறுப்புக் கொண்டனர். இங்ஙனம் பகவானுடைய சரிதத்தைக் கூறிவிட்டு ஶுகாசார்யர் நரநாராயணாஶ்ரமம் சென்றார். மார்க்கண்டேயர் முதலிய முனிவர்கள் கல்கியின் மஹிமையைக் கேட்டு அவரை த்யாநம் செய்து துதித்தார்கள்.

கல்கியின் ஆளுகையால் பூமியில் அதர்மிஷ்டர்களோ அல்பாயுஸ் உள்ளவர்களோ தரித்திரர்களோ நாஸ்திகர்களோ காரணம் கேட்பவர்களோ ஆதிவ்யாதி க்லேஶங்களோ கிடையாது. பொறாமை உள்ளவரோ கபடமுள்ளவரோ இல்லை. எல்லோரும் ஆநந்தமுள்ளவர்களாகவே இருந்தனர். கல்கியின் சரிதம் மிகப் பாவனமானது. ஸகல பாபங்களையும் அகற்றி ஸகல ஸம்பத்துகளையும் தரும். கலியால் ஏற்படும் தாபம் சோகம் அதர்மம் கவலை முதலியவைகளை அறவே அகற்றும். ஶௌநக ப்ருகுமுநி இதைக் கேட்டு மிக ஸந்தோஷமடைந்து மற்ற மஹர்ஷிகளுடன் கூடி ஸூதபுராணிகரைப் பூஜித்தார்.

### த்ருதீயாம்சம்—இருபதாமத்தியாயம்.

ஸூதரே! மஹர்ஷிகள் கங்கையை ஸ்துதிசெய்து பகவானைத் தர்சிக்க வந்தார்கள் என்றீர்களே! அந்த கங்கா ஸ்துதியை விரிவாகக் கூறுங்கள், என்று வினவ ஸூத புராணிகர் கூறினர். பெரிய விருத்தங்களாலாகிய எட்டு சுலோகங்களின் கருத்து:—இந்த கங்காதேவி நமது ஸம்ஸாரக் கடலைக் கடக்கும் தோணி—விஷ்ணு பாதத்திலிருந்து கிளம்பியவள். ஸுமேருமலை சிகரத்திலிருந்து பூமிக்கு வந்தவள். பாபத்தை அகற்றுபவள். பவபயத்தை விரட்டுபவள். பகீரதனைத் தொடர்ந்து வந்தவள். ஐராவதத்தின் கொழுப்பை அடக்கியவள். சிவனுக்கு மகுடமானவள். இமயமலைக்கு வெண்கொடிபோன்றவள். பிரும்மாதி தேவர்களால் போற்றப்படுபவள். மோக்ஷபலனை அளிப்பவள். பிரும்மாவின் கமண்டலுவிலிருந்து புறப்பட்டவள். முக்தி விதையிலிருந்து வந்த கொடி,

ஶ்ருதி ஸ்மிருதி கணங்களால் துதிக்கப்படுபவள். பிராம்மண ஸேவை எனும் பாத்தியுள்ளவள். மூவுலகிலும் பெருகி வந்தவள். ஸுகமெனும் பழமளிப்பவள். ஸகர புத்ரர்களுக்கு முக்தி தந்தவள். ஜந்நு முநியின் புத்ரியானவள். மந்தாகினீ எனப் பெயர் பெற்றவள். விமலமான தீர்த்தமுள்ளவள். கங்கே என பெயரைக் கூறினும் நீராடினும் ஸகல பாபங்களையும் அகற்றுபவள்.

சந்தநு மனைவியாகி பீஷ்மனைப் பெற்றவள். ஸமுத்ர காமினியானவள். கல கல என ஶப்தமுள்ளவள் ஜல ஜந்து நிறைந்தவள். முநிவர்களாலும் அநந்தனாலும் அர்ச்சிக்கப்பட்டவள் வேகமாக ஓடும் ப்ரவாஹமுள்ளவள். அத்தகைய கங்கையை வணங்குபவனே ஸமர்த்தன். கங்கே என ஜபிப்பவன் தபோநிதி. கங்கையை ஸ்மரிப்பவன் புருஷோத்தமன். கங்கையை ஸேவிப்பவனே ஜயமுள்ள ப்ரபு ஆவான். ஓ கங்கே! உனது புண்ய ஜலத்தில் ஸ்நாநம் செய்து அந்த புண்யத்தால் தேவசரீரம் பெற்று தேவர்களால் கொண்டாடப்படும் காலமெனக்குக் கிடைக்குமா? உனது கரையில் வாஸம், நிர்மலமான உனது நீரில் ஸ்நாநம்! உன்னைத் தர்ஶிப்பது! உன் நாமாவை ஸ்மரிப்பது! பவித்ரமான உனது உற்பத்தியைப்பற்றிப் பேசுவது. இப்படி ஸதா உனது ஸேவையிலீடுபட்டு சுத்தனாக எப்போது பூமியில் ஸஞ்சரிப்பேன்?

இப்படி மஹர்ஷிகள் துதித்த இதைப் படிப்பவர் ஸர்வ பாபங்களும் அகல ஸர்வ ஸம்பத்தையும் பெறுவர். மூன்று வேளைகளிலும் இதைப் பக்தியுடன் பாராயணம் செய்தால் கங்கா தேவி ப்ரத்யக்ஷமாவாள். இங்ஙனம் சுகர் பார்க்கவாதிகளுக்குக் கூறியதை உங்களுக்குக் கூறினேன் என்றார் ஸூதபுராணிகர்.

## த்ரிதீயாம்சம்—இருபத்தோராமத்யாயம்.

ஸ்ரீ கல்கி புராணத்தில் கூறப்பட்ட விஷயங்கள் எது எது என சுருக்கமாகக் கூறப்படுகிறது. இதில் மார்க்கண்டேயருடன் சுகர் பேசுதல், அதர்ம வம்சம், கலியின் ஸ்வரூபம், பூமியுடன் தேவர் பிரும்மலோகம் செல்லுதல், பிரும்மாவின் பிரார்த்தனைப்படி மகாவிஷ்ணு விஷ்ணு யஶஸ்ஸின் புத்ரனாகப் பிறந்தது, சம்பள நகரத்தில் ஸுமதியிடம் நான்கு புத்ரர்களாக விஷ்ணு அம்ஶம் தோன்றுதல், உபநயநம் பற்றி புத்ரன் பிதாவை வினவுதல், உபநயநம், வேதமோதல், பரசுராமரிடம் ஶஸ்த்ர

அஸ்த்ரங்களைக் கற்றது, சிவதர்ஸநம், ஸ்துதி வரம்பெறல், குதிரை, கிளி முதலியன பெறுதல், ஸம்பளத்திற்குத் திரும்பல், விஸாகயூபனது சரிதம், ஸுகர் வருவது, கல்கி சுக ஸம்வாதம், ஸிம்மல விருத்தாந்தம், சிவன் பத்மாவுக்கு வரமளித்தல், அதனால் ஸ்வயம்வரத்திற்கு வந்த அரசர்கள் பெண்களானது, பத்மையின் துக்கம், கல்கிக்கு விவாஹ யோசனை, சுகத்தை பத்மாவிடம் தூதனாக அனுப்பியது, ஸிம்ஹலத்தில் சுகம் பத்மாவைத் தர்சித்துப் பேசுதல், விஷ்ணுவை அவள் அர்சித்தல், பகவானைப் பாதாதி கேசாந்தம் வர்ணித்தல், கிளிக்கு ஆடை ஆபரணம் ஆதித்யம், சுகம் பகவானிடம் பத்மாவைப்பற்றிக் கூறி ஸிம்மலத்திற்கு அழைத்து வரல், கல்கி பத்மா விவாஹம். பெண்ணுயிருந்த அரசர்கள் மறுபடி புருஷர்களாதல், அநந்தர் வருதல், ராஜாக்களுக்குத் தனது சரிதத்தைக் கூறல், தான் நபும்ஸகனாக இருந்தது, ஸிவ ஸ்துதி, பெற்றோர் மரணம், விஷ்ணு க்ஷேத்திரத்தில் மாயா தர்சநம், அநந்தர் சரிதம், அரசர்கள் பிரயாணம், கல்கி பத்மாவுடன் சம்பளம் வருதல், விஸ்வகர்மா கல்கிக்குப் புதிய நகரம் அரண்மனைகளை அமைத்தல், க்ஞாதி பந்து ஸேனைகளுடன் புத்த ஜைநர்களை ஜயித்தல், பௌத்தாதிகளின் ஸ்த்ரீகள் யுத்தத்திற்கு வருதல், வாலகில்யர்களது விக்ஞாபநம், குதோதரியையும் அவள் புத்ரனையும் வதம் செய்தல், ஹரித்வாரத்தில் ரிஷிகள் கல்கியை ஸந்தித்தல், சந்த்ர ஸூர்ய வம்ஸவர்ணநம், ஸ்ரீராம சரிதம், தேவாபியும் மருவும் கல்கியிடம் வருதல்.

திக்விஜயம், கோக விகோகர்கள் வதம், பல்லாட தேச யாத்ரை, சய்யாகர்ணுதிகளுடன் போர், சசித்வஜனுடன் யுத்தம், ஸுஸாந்தையின் பக்தி, கல்கியை வீட்டிற்குத் தூக்கிச் செல்லல், தர்மமும் கிருதயுகமும் அங்கு வருதல், ரமா கல்கி விவாஹம், சசித்வஜன் முற்பிறவியில் தான் கழுகாக இருந்ததைக் கூறல், சசித்வஜனுக்கு மோக்ஷமளித்தல், விஷ கன்யகையை மீட்டல், அரசர்களுக்கு ராஜ்யம் வகுத்துப் பட்டாபிஷேகம் செய்தல், மாயா ஸ்தோத்ரம், சம்பள நகரில் பற்பல யாகம், நாரதர் விஷ்ணு யஸஸ்ஸிற்கு மோக்ஷமார்க்கம் கூறுதல். க்ருதமும் தர்மமும் உலகில் பரவுதல், ருக்மிணி வ்ரதாநுஷ்டாநம், பகவானது லீலை, தேவர்களது பிரார்த்தனை, வைகுண்டம் செல்லுதல், ஸுகர் செல்லுதல், கங்கா ஸ்தோத்ரம் இங்ஙனம் ஐந்து புராண லக்ஷணங்களுடன்

கல்கி புராணம் ஆருயிரத்து நூறு சுலோகங்களால் அமைந்தது.

விதிப்படி ஸங்கல்பம் செய்துகொண்டு பாராயணம் செய்தாலும் கதையாகக் கேட்டாலும் விரும்பிய பலனைத் தரும். ஸர்வ ஶாஸ்த்ரார்த்தங்களும் இதில் இருக்கின்றன. ப்ரளயத்தின் முடிவில் பகவானது முகத்திலிருந்து கிளம்பியது. வ்யாஸர் பரமாத்புதமான இந்த கல்கி புராணத்தை இயற்றினர். பக்தியுடன் கல்கி புராணத்தைப் புண்ய தீர்த்தக்கரையில் ஸாதுக்களது ஸதஸ்ஸில் நல்ல க்ஷேத்ரத்தில் படிக்கச் செய்து, பௌராணிகருக்கு கோ ஸுவர்ணம் வஸ்த்ரம் முதலியவைகளைத் தந்து ஶ்ரவணம் செய்பவர் ஜீவன்முக்தராகி முடிவில் கைவல்யத்தைப் பெறுவர். விதிப்படி கேட்கும் பிராம்மணர் வேத பாரங்கதராவர். க்ஷத்ரியன் பூமிபதியாவான். வைஶ்யன் செல்வவானுகவும் மற்றவர் மஹானுகவும் ஆவர்.

இங்ஙனம் கூறி முனிவர்களிடம் விடைபெற்று ஸூத புராணிகர் தீர்த்த யாத்திரைக்குச் சென்றூர். சௌனகாதி முநிவர்களும் திவ்ய கதா ஶ்ரவணத்தால் பகவானை த்யாநம் செய்து பிரும்ம ஸ்வரூபத்தைப் பெற்றனர். ஸர்வ சாஸ்த்ரங்களையும் அலசி பலமுறை விசாரித்துப் பார்த்தால் நாராயணனை ஸதா த்யாநம் செய்யவேண்டுமென்பதே நிச்சயமான முடிவாகும்.

வேதத்திலும் ராமாயணத்திலும் பாரதத்திலும் ஆரம்பத்திலும் இடையிலும் முடிவிலும் பகவானே கூறப்படுகிறூர். நீர்கொண்ட மேகம்போல் திருமேனியுள்ளவரும் காற்றுபோல் பறக்கும் குதிரை வாஹந முள்ளவரும் கையில் கத்தி ஏந்தியவரும் ஸர்வ லோகங்களையும் காப்பவரும் கலி எனும் வநத்தை அழிப்பவரும் ஸத்ய தர்மங்களை ஆதரித்தவரும் கல்கி ரூபியான அரசன் பகவான் நமக்கு க்ஷேமத்தை அளிக்கட்டும்.

सजल जलददेहो वात वेगक वाहः
करधृत करवालः सर्वलोकैकपालः।
कलिकुल वन हन्ता सत्यधर्मप्रणेता
कलयतु कुशलं वः कल्किरूपः स भूपः॥

ஸ்ரீ வேதவ்யாஸாய நம:

ஸ்ரீ கல்கி புராணம் முற்றிற்று.

Printed & Published by A. Venkataraman at The Sri Meenakshi Press, Sirkali.

Editor: Srivathsa V. Somadeva Sarma.